# மாங்கை

நவம்பர் '91

## தீபாவளிச் சிறப்பிதழ்

★ காஞ்சி ஸ்ரீ காமகோடி சுவாமிகள் ஸ்ரீஜயேந்திரரின் ஸ்ரீமுகம்

★ தமிழக அமைச்சர் மாண்புமிகு இந்திர குமாரியுடன் ஒரு சிறப்புப் பேட்டி

★ நகை அலங்காரங்கள்-புகைப்படப் பகுதி

★ 'கர்நாடக இசையில் இளைஞர்கள் ஆர்வம்' மகாராஜபுரம் சந்தானம்.பாடகி திருமதி சுதாகிருஷ்ணன் சந்திப்பு

★ சிறப்புப் பேட்டிகள்

★ சிறந்த சிறுகதைகள்

★ சிறப்புமிக்க கட்டுரைகள்

★ நகைச்சுவைப் பகுதி

★ சுவையான புகைப்பட அனுபந்தம்

தீபாவளி விழாக் குதூகலத்தை அதிகரிக்கச் செய்யும் மற்றும் பல அம்சங்களுடன்

100-க்கும் மேற்பட்ட பக்கங்களுடன் வெளிவருகிறது

விலை ரூ. 8/-



TA—F-1

BSA Secret Seekers SLR



# தெய்வங்களின்

காத்துக் கொண்டிருந்தீர்கள் அல்லவா? இதோ வந்துவிட்டனர் துப்பறியும் புலிகள் மற்றும் மோர் மர்மத்திற்கு விடைகாண. BSA SLR துப்பறியும் புலிகள் தம் விடுமுறையைக் கழிப்பதற்காக தெய்வங்களின் தீவிற்கு வந்திருக்கிறார்கள். ஓரிரவில் கடற்கரையில் உரத்த சந்தடி. என்னவென்று ஆராய முனைந்த அவர்கள், விக்கிரகங்கள் நிறைந்த ஓர் அறையை அடைகின்றனர். அவற்றை கொண்டு வந்தது யார்? பக்கத்திலேயே பதுங்கியிருக்கிறான் விக்கிரகத் திருடன் ஒருவன்.




ரவு மணி 10.30. பூஜாவிற்கு தூக்கம் கொள்ளவில்லை. கடந்த இரண்டு நாட்களில் அவள் கடலில் மின்னல் போன்று ஒளிவிடும் விளக்குகளைக் கண்டிருந்தாள். கடத்தல்காரர்களோ? மற்றவர்கள் அவளை நம்பவில்லை. 11.05. மறுபடியும் அந்த ஒளி! "விபுல் ரால்ஃப் எழுந்திருங்கள்" என்று அவர்களை உலுக்கி எழுப்பினாள் பூஜா.






ருடன் கண்டுபிடிக்கப்பட்டான்

தம் BSA SLR-களில் கடற் கரைக்கு விரைந்தனர் துப்பறியும் புலிகள். BSA சக்கரங்களின் உறுதியான பிடிப்பு மணலில் புரளாமல் செல்ல உதவியது.

கடற் கரையை நெருங்க, மீனவனின் பாட்டின் இசை அவர்கள் காதில் விழுந்தது. "கனமான பிடி!" பூஜாவின் முகத்தில் ஏமாற்றும் தெரிந்தது. கடத்தல்காரர்களாக இருக்க முடியாது. அப்போது, தன் BSA-ன் சக்கரம் கெட்டியான் ஒரு பொருளின் மீது



BSA SLR

Get Set'n' Go on an adventure

செல்வதை பூஜா உணர்ந்தாள்.

"பார், லால் மாமாவின் 'வாக்கிங் ஸ்டிக்" என்று, சுட்டிக்காட்டினாள் ரால்ஃப். "இங்கு எப்படி வந்தது இது?" சற்று குழப்பமடைந்தபோதிலும், விழிப்புடன் தம் BSA -க்களில் அவர் வீடு நோக்கி வேகமாகச் சென்றனர். அவர் வீட்டில் இல்லை. அச்சமயம் கதவு



# தீவின் மர்மம்

முனகிக் கொண்டே திறக்க, லால் மாமா உள்ளே வந்தார். கையில் ஒன்றுமில்லாமல், வெறுங்காலில். "இதென்ன ஆச்சர்யம்" என்றாள் பூஜா தடுமாற்றத்துடன். 'வாக்கிங் ஸ்டிக்' இல்லாமல் அவரை அவர்கள் பார்த்ததேயில்லை.

## கிடைத்தன விக்கிர்கங்கள்

கதவு மூடியதும் அவர் வந்த வழியில் சென்றனர் துப்பறியும் புலிகள். ரால்ஃப், தன் தூரதரிசினியில் பார்த்த வண்ணம், லேசான தன் BSA-ல் சிறிதும் தடுமாறாமல் லாவகமாகச் சென்றான். "ஏய்! அதோ ஒரு கொட்டகை." பூஜா உள்ளே எட்டிப் பார்த்தாள். "ஓ! இங்கு ஒரு பொக்கிஷமே இருக்கிறது." பத்திரிகைகளில் குறிப்பிட்டிருந்ததுபோல, பல அளவுகளில் களவுபோன கடவுள் விக்கிரகங்கள்!

அப்போது, கொட்டகையை நோக்கி வரும் விளக்கொளியைக் கண்டனர். "சீக்கிரம்! ஏறுங்கள் BSA SLR -களில்! பாறைக்குப் பின்னால் பதுங்குங்கள்!"

விக்கிரகத்திருடன் யார்? தெரிந்து கொள்ள, படியுங்கள் "பறவை வேடர்களின் மர்மம்"

**இப்போது ஒவ்வொரு BSA SLR உடன் ஒரு டிஸ்டன்ஸ் ஸீக்கர் மற்றும் ப்ரேக் லைட்**



# Ekco®

# மார்க்கர்

## "24" கொண்ட பேக்கிலே

இது புதியது! இது நேர்த்தியானது! தெளிவான துடிப்பான வண்ணங்களில்!

இலட்சக்கணக்கான மார்க்கர் செட்டுகள் யு.எஸ்.ஏ. வுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

"12" கொண்ட பேக்கிலும்
கிடைக்கிறது.

Ekco
MARKERS
24 FINE LINE WATER COLOUR MARKERS colour, draw and write in a rainbow of colours
Manufactured by Precision Writing Points Private Limited, G.I.D.C., Chitra, Bhavnagar 364 004
Max Retail Price Rs.32.50 inclusive of all taxes per set of 24 shades




குழந்தைகளுக்கு ஏற்ற
கச்சிதமான அன்பளிப்பு.




SureShot/336/Tam.

இந்தியாவின் மிகப்பெரிய உற்பத்தியாளர்கள் மற்றும் ஏற்றுமதியாளர்கள்.

ப்ரெசிஷன் ரைட்டிங் பாய்ண்ட்ஸ் பிரைவேட் லிட்., 18 சுபாஷ் ரோட், விலி பார்லே (கி), பம்பாய்-400 057.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## உண்மையைத் தேடி

அக்டோபர் மாதம் என்றதுமே நம் நினைவிற்கு வருபவர் மகாத்மா காந்திதான். ஆம். இந்த மாதத்தில்தான் அவரது பிறந்த நாளை நினைவுகூர்ந்து விமரிசையாக கொண்டாடு கிறார்கள். மகாத்மா காந்தி என்றாலே உடனே எல்லோரும் எண்ணுவது 'சத்தியாகிரகம்' என்ற சொல்லைத்தான்.

இருபதாவது நூற்றாண்டின் ஆரம்பகாலத்தில் இந்தியா விற்கு வருவதற்கு முன் அவர் தென்னாப்பிரிக்காவில் வழக் கறிஞராக இருந்தார். அந்நாட்டின் இனவெறிக் கொள்கையை எதிர்த்து அங்கு வாழ்ந்த இந்தியர்களுக்குத் தலைமை தாங்கி 'அமைதியான முறையில் எதிர்ப்பு' என்ற இயக்கத்தை அந் நாட்டு அரசாங்கத்திற்கு எதிராக நடத்தினார்.

அவர் இந்தியாவை அடைந்ததும் அந்நியர் ஆட்சியிலி ருந்து விடுதலைபெற நடந்து வரும் போராட்டத்திற்குத் தலைமை தாங்கினார். அரசாங்கத்துடன் ஒத்துழைப்பதில்லை என்ற இந்த இயக்கத்திற்குப் பெயர்தான் சத்தியாகிரகம் என அவர் கூறினார்.

சத்தியாகிரகம் என்றால் உண்மையில் உறுதியான பிடிப்பு என்று பொருள். இது ஒவ்வொரு தனி மனிதனின் முயற்சி யாக இருக்கும். இதில் வன்முறைக்கே இடம் இல்லை. இத்தகைய உள்ளுணர்வை காந்திஜீ அந்தராத்மா வின் குரல் எனக் கூறி வந்தார். இந்த அந்தராத்மா கூறுகிறபடி நடந் தால் எதையும் சாதித்து விடலாம் என அவர் கூறி வந்தார்.

ஆனால் இந்தியா விடுதலை அடைந்தபின் பலர் வன்முறை களைப் பயன்படுத்தி இயக்கங்களை நடத்தி அவற்றிற்குச் சத்தியாகிரகம் என்ற பெயரை அளித்து விடுகிறார்கள். அது அவர்கள் மகாத்மா காந்திக்கு இழைக்கும் அநீதியாகும். ஒரு பிரச்னையின் அடிப்படை உண்மையைக் கண்டு அதற் குத் தீர்வு காண முயன்றால் அது எளிதில் தீர்ந்து விடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

மதிமுகம்: 89 அக்டோபர் 1991 புன்னகை: 4

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00






# லா! லா! லா! இந்தியாவின் க்ரீம் மிகுந்த, சுவைமிக்கச் சாக்கலேட் இதோ வந்துவிட்டது!

கேம்ப்கோ க்ரீமி மில்க் சாக்கலேட் ஏற்றுமதி ரக சிறந்த கோகோவினால் தயாரிக்கப்பட்டது. இதன் அதி அற்புத சுவை உங்கள் மனதைக் கொள்ளை கொண்டுவிடும்.









இந்தியாவின் மிகப் பெரிய நவீன ஆலை அளிப்பது.

கேம்ப்கோ லிமிடெட், மங்களூர்.




R K SWAMY/BBDO CL 9320TM

# மறைந்து வரும் இனவெறி

விளையாட்டு அரங்கத்தில் தென்னாப்பிரிக்கா மீது விதிக்கப்பட்ட தடை விலக்கப்பட்டது. அந்நாடு உலக விளையாட்டுப் போட்டிகளில் மீண்டும் கலந்து கொள்ளப் போவது குறித்து விளையாட்டு அபிமானிகள் மகிழ்ச்சி அடைந்துள்ளார்கள். தென்னாப்பிரிக்கா கடைப்பிடித்த இனவெறிக் கொள்கை காரணமாக இண்டர்நேஷனல் கிரிக்கெட் கௌன்சிலும் "இன்டர்நேஷனல் ஒலிம்பிக் கமிட்டியும் அந்நாட்டை 1970 லிருந்து எந்த விளையாட்டிலும் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று தடைவிதித்தன. இருபத்தோரு ஆண்டுகளுக்குப் பிறகு கடந்த ஜூலை மாதத்தில் அந்தத் தடை விலக்கப்பட்டது.

தடை நீக்கப்பட்டதால் தென்னாப்பிரிக்கா 1992 பிப்ரவரியில் நடைபெறும் உலகக் கோப்பைக்கான கிரிக்கெட் போட்டிகளிலும் அப்போது ஸ்பெயின் நாட்டில் பார்சிலோனாவில் நடக்கும் ஒலிம்பிக் போட்டிகளிலும் கலந்து கொள்ளும். இதுவரை தென்னாப்பிரிக்கா கடைப்பிடித்த இனவெறிக் கொள்கையால் அந்நாட்டு இளைஞர்களுக்கு உலகப் போட்டிகளில் இடம்பெற முடியாமல் போயிருந்தது.

தென்னாப்பிரிக்க அரசாங்கம் தன் கொள்கை பயனற்றது எனக் கண்டு




அதனை மாற்றிக் கொண்டுள்ளது. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக சிறைவாசம் அனுபவித்த நெல்சன் மண்டேலாவை விடுதலை செய்து தென்னாப்பிரிக்க நாட்டு அதிபர் டிகிளார்க் பேச்சுவார்த்தைகள் நடத்தித் தம் நாட்டின் கொள்கையில் மாற்றம் செய்தார். இதனால் அங்குள்ள கருப்பர்கள் எங்கு போய் வசிக்கவும், அவர்களது குழந்தைகள் எந்தப் பள்ளியிலும் சேரவும் எந்த நிறுவனத்திலும் வெள்ளையரைப் போல உத்தியோகம் பெறவும் உரிமைகளைப் பெற்றனர். இவ்வாறு தென்னாப்பிரிக்கா இதுவரை கடைப்பிடித்து வந்த இனவெறிக் கொள்கை ஒழிந்தது.

தென்னாப்பிரிக்காவில் ஏற்பட்டு வரும் மாறுதல்களை உலக நாடுகள் உன்னிப்புடன் கவனித்து வருகின்றன அமெரிக்கா கடந்த ஆறு ஆண்டுகளாக விதித்த பொருளாதாரத் தடையை இப்போது விலக்கியுள்ளது. ஜப்பான் இதனைப் பாராட்டியது. ஆனால் ஆஸ்திரேலியாவும் ஸ்வீடனும் இதனை அவசரத்தில் எடுத்த முடிவு எனக் கருதுகின்றன.

தென்னாப்பிரிக்கா அவசர நிலையை விலக்கி அரசியல் கைதிகளை விடுவித்து அரசியல் மாற்றங்களைச் செய்து அரசாங்கத்தில் கருப்பர்களுக்கும் பொறுப்பு கொடுப்பதால் அதன் கொள்கை மாறிவிட்டதாக அமெரிக்கா கருதுகிறது.

தென்னாப்பிரிக்கா இனவெறிக் கொள்கை மாறியது கண்டு நெல்சன் மண்டேலா மகிழ்ச்சியைத் தெரிவித்தாலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் எனவும் கூறியுள்ளார். ஏனெனில் பல அரசியல் கைதிகளை ஏதேதோ சாக்கு சொல்லி அந்த அரசாங்கம் இன்னமும் விடுதலை செய்யவில்லை. கருப்பர்களிடையே பிளவு ஏற்படுத்தச் சில பிரிவினருக்கு அது சலுகைகள் காட்ட ஆரம்பித்துள்ளது. இதனால் கருப்பர்களிடையே வன்முறை அதிகரித்துக் கலகங்கள் மூண்டு வருகின்றன. இதனால் சுதந்திர அரசாங்கம் அமைய இடைஞ்சல்கள் ஏற்படுகின்றன. எனவே அங்கு முழுசுதந்திரம் பெற கருப்பர்கள் மேலும் தொடர்ந்து முயன்றாக வேண்டும்.



Nelson Mandela with wife Winnie




# அருளால் மட்டுமா?

தங்கப்பனுக்கு அவன் தந்தை இறந்த பிறகுதான் பொறுப்பு என்பது என்ன என்று அறிய முடிந்தது. இளம் வயதில் தாயை இழந்த அவனை அவனது தந்தை அவன் போன போக்கில் விட்டார். அதனால் அவன் எதுவும் படிக்காமல் உதவாக்கரையாக ஆனான். எந்த வேலையையும் செய்ய அவன் உடம்பு வளையவில்லை.

தங்கப்பன் தன் தகப்பன் விட்டுப்போன சொத்தின் பேரில் கடனை வாங்கி அவற்றை எல்லாம் இழந்துவிட்டான். அந்த நிலையில் வயிற்றுப் பாட்டிற்கு ஏதாவது ஒருவேலை செய்தாக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. அவனை அந்த ஊரார் நன்கு அறிவார்களாதலால் அவனுக்கு யாரும் வேலை கொடுக்கவில்லை.

முடிவில் வேறு ஊருக்குப் போய் வேலை தேடுவது என்ற முடிவோடு ஒருநாள் மாலை அவன் தன் ஊரைவிட்டுக் கிளம்பினான். இருட்டும் போது அவன் ஒரு அடர்ந்த காட்டை அடைந்தான். அப்போது திடீரென பலத்த காற்று அடித்து பெருத்த மழையும் பெய்தது. எங்காவது தங்கலாம் என நினைத்து அவன் சுற்றிலும் பார்த்த போது சற்று தூரத்தில் மங்கிய விளக்கொளி தெரிந்தது.

அவன் அதனை நோக்கிச் சென்றபோது ஒரு பாழடைந்த அம்மன் கோவிலை அடைந்தான். அங்கு விளக்கொளியில் ஒரு வாலிபன் அக்கோவிலை ஒரு ஈரத்துணியால் துடைத்து சுத்தம் செய்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

அந்த வாலிபனும் தங்கப்பனைக் கண்டு "ஓ! மழையில் நன்றாக

—பாபநாசம் சாமா—



நனைந்து விட்டாயே. இந்தா! இந்தத் துண்டைக் கொண்டு தலையைத் துடைத்துக் கொள் பிறகு வேஷ்டி சட்டையைப் பிழிந்து அணிந்து கொள்'' என்று கூறி ஒரு துண்டைக் கொடுத்தான். தங்கப்பனும் அவன் கூறியபடியே செய்தான்.

அப்போது அவ்வாலிபன் ''என் பெயர் பாலன். ஏதாவது வேலை கிடைக்குமா என்று நினைத்து நான் வீட்டை விட்டுக் கிளம்பி வந்தேன். உன்னைப் பற்றி விவரம் கூறுகிறாயா?'' என்று கேட்டரன். தங்கப்பனும் ''நானும் உன்னைப் போலத்தான்'' என்று கூறித் தன்னைப் பற்றி விவரமாகக் கூறினான். அப்போது பாலன் ''சரி தான். நாம் இருவரும் ஒரே மாதிரி தான்'' என்றான் சிரித்தவாறே.

பாலன் தான் கொண்டு வந்த ரொட்டியைத் தங்கப்பனோடு பகிர்ந்து உண்டான் இருவரும் அங்கே ஓரிடத்தில் படுத்தார்கள். அப்போது தங்கப்பன் ''இந்தக் காலத்தில் வேலை கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. யாருக்காவது லஞ்சம் கொடுத்தாலே வேலை கிடைக்கிறது'' என்றான்.

பாலனும் ''நீ சொல்வது உண்மையே எனக்கு மட்டும் யாராவது வேலை கொடுத்தால் என் திறமையை வெளிப்படுத்தி உண்மையாய் உழைத்து என் நேர்மையைக் காட்டுவேன்'' என்றான். அப்போது ஒரு குரல் ''அப்படியானால் நான் உங்களுக்கு ஒரு வாய்ப்பு அளிக்கிறேன்'' என்றது. மறுநிமிடம் அவர்கள் இருவரின் முன் அம்மன் காட்சி அளித்தாள். பாலனும் தங்கப்பனும் அவளை வணங்கி ''தாயே! வேலை இல்லாது திண்டாடும் எங்களுக்கு நீ உதவுவது உனக்கு எங்கள் மீது ஏற்பட்டுள்ள இரக்க இயல்பையே காட்டுகிறது'' எனக்கூறித் துதித்தார்கள்.

அம்மனும் ''உங்கள் இருவருக்கும் ஆளுக்கு ஒரு மண் கலயமும், ஒரு குளிகையும், ஒரு பித்தளை மோதிரமும் கொடுக்கிறேன். நீங்கள் யார்முன்னும் அந்த மண்கலயத்தைப் போட்டு உடைத்து, குளி

கையை வாயில் போட்டுக் கொண்டால் அந்த மனிதன் நீங்கள் சொல்கிறபடியே நடப்பான். இந்தப் பித்தளை மோதிரம் உங்கள் விரலில் இருக்கும்வரை நீங்கள் பெற்ற பொருள்கள் உங்களிடமே நிலைத்து இருக்கும்'' என்று கூறி அப்பொருள்களை அவர்களுக்குக் கொடுத்தாள்.

அவர்கள் அவற்றை வாங்கிக் கொண்டதும் அம்மன் "இப்பொருள்களுக்கு நான் கூறிய சக்தி மூன்று நாட்களுக்கே இருக்கும். அதனால் மூன்றாவது நாள் நீங்கள் இங்கு வந்து இதனால் அடைந்த பலனை என்னிடம் கூற வேண்டும்'' என்று சொல்லிவிட்டு மறைந்தாள்.



மறுநாள் காலை மழை நின்றது அப்போது பாலன் "நான் அம்மன் கொடுத்த பொருள்களுடன் கிழக்கு திசையில் செல்கிறேன் நீயும் என்னோடு வருகிறாயா?'' என்று கேட்டான் தங்கப்பனோ "இல்லை. நான் மேற்குப் பக்கமாகப் போகிறேன். இருவரும் மூன்று நாட்களானதும் மறுபடியும் இங்கே சந்திக்கலாம்'' என்றான்.

இருவரும் தாம் தேர்ந்தெடுத்த திசையில் சென்றனர். தங்கப்பன் அக்காட்டிலிருந்து போய் இருட்டும் போது ஒரு நகரத்தை அடைந்தான். அம்மன் கொடுத்த அந்த மூன்று பொருள்களையும் எப்படி உபயோகிப்பது என்பது பற்றி அவன் யோசித்து ஒரு முடிவிற்கு வந்திருந்தான் அதனால் அவன் ஒரு பெரிய மாளிகைக்குப் போய் கதவைத் தட்டினான். அந்த வீட்டு எஜமானி கதவைத் திறந்து கொண்டு வரவே அவன் மண்கலயத்தை அவள் முன் போட்டு உடைத்து "உன்னிடம் உள்ள தங்கத்தை என்னிடம் கொடுத்துவிடு'' என்றான்.

மறுநிமிடம் அந்தப் பெண்மணி "தங்கம்! தங்கம்'' என்று குரல் கொடுத்தாள். மறுநிமிடம் ஒரு பயங்கர வேட்டை நாய் ஓடி வந்து தங்கப்பனின் காலைக்கடித்து இறுகப் பிடித்துக் கொண்டது. அவன் எவ்வளவு முயன்றும் அதனின்றும் விடுபட முடியவில்லை. அப்போது அவனுக்குத்தான் அணிந்



திருந்த பித்தளை மோதிரத்தின் சக்தி பற்றி அம்மன் கூறியது நினைவிற்கு வந்தது அவன் உடனே தான் அணிந்திருந்த பித்தளை மோதிரத்தைக் கழற்றி தூர எறிந்தான். அப்போது நாய் அவனை விட்டு விட்டுப் போய்விட்டது. தங்கப்பன் இவ்வாறு தான் பெற்ற சக்தியை வீணாக்கிவிட்டு அம்மன் கோவிலுக்குத் திரும்பிச் சென்றான்.

அவன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்ததைப் பார்த்த அம்மன் "என்ன விஷயம்? ஏன் இப்படி கவலையோடு இருக்கிறாய்?" என்று கேட்டாள். தங்கப்பனும் நடந்ததைச் சொன்னான்.

அப்போது விலையுயர்ந்த பட்டாடைகளை அணிந்து மிகுந்த உற்சாகத்துடன் பாலன் வந்தான். அம்மன் அவனிடம் அவனது அனுபவம் என்ன என்று கேட்கவே அவனும் கூறலானான்.

"நான் அந்த அபூர்வப் பொருள்களை எப்படிப் பயன் பெறத்தக்க முறையில் உபயோகிப்பது என்று யோசித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்தவனாய்த் தலைநகருக்குச் சென்றேன். அப்போது மாலை வேளை மன்னர் அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தார். அவர் முன் கலயத்தைப் போட்டு உடைத்து குளிகையை வாயில் போட்டுக் கொண்டேன். மன்னரிடம் அவரது தர்பாரில் ஒரு உயர்ந்த உத்தியோகத்தைக் கொடுக்குமாறு கேட்டேன். அவரும் "ஆகா! தாராளமாகக் கொடுக்கிறேன். நாளையே வேலையில் சேர்" என்றார்.

நானும் உத்தியோகத்தில் சேர்ந்து சம்பளத்தில் முன்பணமாகக் கொஞ்சம் வாங்கிக் கொண்டேன். நான் வசிக்க ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்தும் எடுத்த நல்ல துணிமணிகளையும் வாங்கிக் கொண்டேன். அந்த ஆடைகளை அணிந்துதான் உன்னைக் காணக் குறித்த காலத்தில் வந்துள்ளேன்."

இவ்வாறு அவன் கூறித் தன் கை விரலில் அணிந்திருந்த பித்தளை மோதிரத்தைக் கழற்றி அம்மனி

டம் கொடுத்து "தாயே! எனக்கு நல்ல உத்தியோகம் கிடைத்து விட்டது. இனி என் திறமையைக் காட்டி அதில் நிலைத்து இருந்து படிப்படியாக உயர்வும் பெறுவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்று பணிவுடன் கூறினான்.

அப்போது அம்மன் "தங்கப்பனுக்கும் உனக்கும் ஒரே மாதிரியான பொருள்களைத்தான் கொடுத்தேன். ஆனால் அவன் அற்ப ஆசையில் அவற்றின் சக்திகளைப் போக்கடித்து வெறுங்கையுடன் திரும்பி வந்திருக்கிறான். பாலனோ தன் திறமையைக் காட்டத் தனக்கு வேண்டிய ஒரு உத்தியோகத்தையே கேட்டான். அவன் மட்டும் நினைத்திருந்தால் மன்னரிடம் நாட்டையே கேட்டிருக்கலாம். மன்னரும் அதனைக் கொடுத்திருப்பார். ஆனால் பேராசைப்படாமல் அவன் தன் சொந்தக் காலில் நிற்கவே விரும்பினான். அவன் வெற்றி பெற்றான்" என்று கூறி மறைந்தாள்.

அப்போது தங்கப்பன் தன் மனதில் "ஆமாம். நான் முன்பின் யோசிக்காமல் அம்மன் கொடுத்த பொருள்களைச் சரியான முறையில் உபயோகிக்காமல் அவற்றை வீணாக்கி விட்டேன். நானும் பாலனைப் போல யோசித்துச் செயல்பட்டிருந்தால் ஏதாவது ஒரு உத்தியோகத்தைப் பெற்றிருக்கலாமே. எனக்குக் கிடைத்த அரிய தோர் வாய்ப்பை இழந்து விட்டேனே" என்று எண்ணி மிகவும் மனம் வருந்தினான்.

மறுநாள் காலை பாலன் தலை நகருக்குக் கிளம்பியபோது "தங்கப்பா! நீயும் என்னோடு வா. உனக்கு நல்ல உத்தியோகம் கிடைக்கும் வரை என் வீட்டிலேயே இருக்கலாம்" என்றான். தங்கப்பனும் "ஓ! வருகிறேன். உன்னிடமிருந்து நிறைய விஷயங்களைக் கற்க வேண்டியிருக்கிறது" எனக் கூறி அவனோடு சென்றான்.



# இதில் சந்தேகம் என்ன?

பனையூர் பரமசிவம் ஒருநாள் கிளி வாங்க அவ்வூர்க் கடைத்தெருவிற்குச் சென்றான். அங்கு ஒரு கடையில் அழகான ஒரு கிளியைக் கண்டதும் கடைக்காரனிடம் அதன் விலை என்ன என்று கேட்டான். கடைக்காரனும் அதன் விலை நூறு ரூபாய் எனக் கூற பரமசிவம் ஆச்சரியத்தோடு "ஒரு கிளிக்கு நூறு ரூபாயா?" என்று கேட்டான்.

கடைக்காரனும் "நீ அந்தக் கிளியிடமே கேட்டுப்பார்" என்றான். எனவே பரமசிவமும் கிளியிடம் "உன் விலை நூறு ரூபாயா?" என்று கேட்டான். அதுவும் "இதில் சந்தேகம் என்ன?" என்றது. அதைக் கேட்டு பரமசிவம் திருப்தி அடைந்து அந்தக் கிளியை நூறு ரூபாய் விலைக்கு வாங்கிப் போனான்.

ஆனால் வீட்டிற்குப் போய் அக்கிளியிடம் பேசியதில் அது "இதில் சந்தேகம் என்ன?" என்ற ஒரே பதிலைத்தான் அளித்தது. அதைக் கேட்ட பரமசிவம் "போயும் போயும் இந்தக் கிளியை நூறு ரூபாய் கொடுத்து வாங்கினேனே. நான் ஒரு பெரிய முட்டாள்" என சலித்துக் கொண்டே கூறினான்.

உடனே கிளியும் "இதில் சந்தேகம் என்ன?" என்றது. அதைக் கேட்ட பரமசிவனின் மனைவியும் மக்களும் 'கொல்'லென்று சிரித்தனர்.






## 7

*[சதானந்த முனிவர் அற்புத சக்தி கொண்ட வினோதனை உருவாக்கினார். அவன் ஏழை எளியவர்களுக்குத் தக்க சமயத்தில் உதவியும் ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்றி வந்தான். தற்போதைய அவனது முயற்சி அடிமை வியாபாரியிடம் சிக்கிய நான்கு சிறுவர்களைக் காப்பாற்றுவதே. அதன் விவரம்தான் பின்வருமாறு:]*

**வி**டியும் வேளைக்குத் துணைத் தலைவன் சிறுவர்கள் படுத்திருந்த அறைக்குச் சென்றான். அவன் அவர்களிடம் ''எழுந்துவாருங்கள். அழகிய சூரியோதயத்தைக் காணலாம்'' என்று கூறி எழுப்பினான். சுகுமாரன் எச்சரித்தபடி தூங்குவது போலப் பாசாங்கு செய்த அவர்கள் கண்களைக் கசக்கியவாறே எழுந்து ''ஆ! நாங்கள் எங்கே இருக்கிறோம்?'' என்று எதுவும் தெரியாதவர்களைப் போலக் கேட்டார்கள்.

துணைத்தலைவனும் ''நான்தான் இந்தக் கப்பலின் தலைவன். சுருளிநாதன்'' எனவே சுகுமாரன் ''நீங்களா எஜமானர்? ஆனால் எங்களை அழைத்து வந்தவர்?'' என்று கேட்டான். சுருளிநாதனும் ''அவர் இந்தக் கப்பலின் மூத்த



அதிகாரிகளில் ஒருவர். இப்போது வேறு வேலையில் ஈடுபட்டிருக்கிறார். அதனால் அவர் இனிமேல் இங்கு வரமாட்டார். உங்களைப் பார்த்துக் கொள்ள வேண்டிய பொறுப்பு இனி என்னுடையது'' என்றான்.

சுகுமாரனும் சோம்பல் முறித்தவாறே ''வெகுநேரமாகிவிட்டது. இனி நாங்கள் எங்கள் வீட்டிற்குத் திரும்பிப்போக வேண்டும்'' என்றான். அது கேட்டு சுருளிநாதன் சிரித்தவாறே ''நீங்களெல்லாம் நேற்றிரவு நன்றாகத் தூங்கிவிட்டீர்கள். உங்களை யாரும் எழுப்பவில்லை. கப்பல் நீங்கள் ஏறிய இடத்திலிருந்து இப்போது வெகு தூரம் வந்துவிட்டது. இங்கிருந்து நீங்கள் கரை சேர வேண்டுமென்றால் நீந்தித்தான் செல்லவேண்டும். அது உங்களால் முடியாது. அதனால் எங்களோடு பல இடங்களுக்கு இந்தக் கப்பலில் போய்விட்டுப் பிறகு நீங்கள் எல்லோரும் உங்கள் வீட்டிற்குப் போய்ச் சேரலாம்'' என்றான்.

சிறுவர்கள் ஒன்றும் அறியாதவர்கள் போல விழித்தார்கள். பிறகு அவர்கள்-''அப்படியானால் நாங்கள் பல நாட்களுக்கு இந்தக் கப்பலில்தான் இருக்கவேண்டுமா?'' என்று கேட்கவே சுருளிநாதனும் ''ஆமாம். உங்களுக்குப் புதியபுதிய அனுபவங்கள் ஏற்படும். பல புதிய இடங்களைக் காணப்போகிறீர்கள். கவலையே படவேண்டாம். சந்தோஷமாக இருங்கள்'' என்றான்.

அதற்கு சுகுமாரன் ''நாங்கள் கவலைப்படாமல் இருந்தாலும் எங்கள் பெற்றோர்கள் நிம்மதியாக இருக்க மாட்டார்கள்'' என்று கூறவே சுருளிநாதனும் ''கொஞ்ச நாட்களுக்கு அவர்களுக்கு வருத்தம் இருக்கத்தான் செய்யும். உங்களை மறுபடியும் கண்டதும் ஒரேயடியாக மகிழ்ந்து போவார்கள்'' என்றான்.

சுகுமாரனும் ''பெரியவர் நீங்கள் முதிர்ந்த அனுபவசாலி. எப்படித்தான் விஷயத்தைப் பிட்டுப் பிட்டு வைக்கிறீர்கள்'' என்று ஆச்

சரியப்படுபவன் போலக் கூறினான். அதைக் கேட்டு சுருளிநாதன் மிகவும் திருப்தி அடைந்தான். அதன் பிறகு அவன் அச்சிறுவர்களை அந்த அறையிலிருந்து வெளியே அழைத்துச் சென்றான்.

எல்லோரும் சூரியோதயத்தை கண்டு மகிழ்ந்து கொண்டிருந்த போது சுகுமாரன் மெதுவாக அங்கிருந்து நழுவி ஒரு ஒதுக்குபுறமான இடத்தில் போய் நின்று கொண்டான். அப்போது வினோதன் அவனருகே வந்து "நீங்களெல்லாம் கப்பலிலிருந்து தப்பிக்க முயல்வது போல நடந்து கொள்ளாதீர்கள். அப்படிச் செய்தால் கொள்ளைக்காரர்கள் உங்களைச் சித்திரவதை செய்வார்கள். அவர்கள் உங்களை எல்லாம் பயன்படுத்திக் கொண்டு ஏதோ ஒரு வேலை செய்யப்போகிறார்கள். சற்று தூரத்தில் ஒரு வியாபாரக் கப்பல் வந்து கொண்டிருக்கிறது. அதை இந்தக் கப்பலின் கொள்ளைகாரர்கள் தாக்கப்போகிறார்கள். இவர்களது திட்டம் என்ன என்று தெரிந்து கொள்ள வேண்டும். அதை நீ அறிய முயற்சி செய்" என்றான்.

சுகுமாரனும் அவ்விதமாக செய்வதாகக் கூறிவிட்டு அங்கிருந்து மெதுவாக நகர்ந்தான். அப்போது தான் அவன் கவனித்த சுருளி நாதன் "தம்பீ! நீ தனியாகப் போய் ஓரத்தில் நின்று எட்டிப்பார்க்காதே. எங்காவது கால்தவறிக் கடலில் விழுந்து விடுவாய். அது எப்போதுமே ஆபத்தானது. இங்கே





வா'' என்று கூப்பிட்டான். சுகுமாரனும் சிரித்துக் கொண்டே அவனருகே வந்தான்.

எல்லோரும் சிற்றுண்டி அருந்தினார்கள் அப்போது சுகுமாரன் சுருளிநாதனிடம் ''நீங்கள் இந்தக் கப்பலைக் கொண்டு என்ன செய்கிறீர்கள்?'' என்று கேட்டான். அவனும் ''வியாபாரம் தான். எங்கள் கப்பலில் இருந்தவற்றை எல்லாம் வேறொரு கப்பல்க்காரர்கள் கொள்ளை அடித்துக் கொண்டு போய்விட்டார்கள். எங்கள் கப்பலில் இருந்த பலர் அவர்களது தாக்குதலால் இறந்து போனார்கள்'' என்றான்.

சுகுமாரனும் மற்ற சிறுவர்களும் ''அடடா அவ்வளவு கொடியவர்களா அவர்கள்?'' என்று கேட்டார்கள். அவனும் ''ஆமாம் மிகவும் கொடியர்கள். கொஞ்சமும் ஈவிரக்கம் இல்லாதவர்கள். நாங்கள் ஒரு பிராணிக்கும் தீங்கிழைக்கக்கூட நினைக்கவில்லை. ஆனால் பாவிப்பயல்கள் எங்களைத்தாக்கிப் பலரது உயிரைப் போக்கி விட்டார்கள் எங்களது பொருள்களையும் கொள்ளை கொண்டு போய் விட்டார்கள்'' என்றான்.

அப்போது சுகுமாரன் ''நீங்கள் எவ்வளவு நல்லவர்கள் என்பது எங்களுக்குத் தெரிகிறது. ஏனென்றால் முன்பின் தெரியாத எங்களை எவ்வளவு மரியாதையுடன் நடத்துகிறீர்கள்! எவ்வளவு ருசியான உணவை அளிக்கிறீர்கள்! உங்களை எப்படித்தான் போற்றுவதோ? அதுசரி, இனிமேல் என்ன செய்யப்போகிறீர்கள்'' என்று கேட்டான்.

சுருளிநாதனும் ''முதலில் ஏதாவது ஒரு தீவை அடைவோம். அங்கு ஏதாவது ஒரு நல்ல லாபகரமான தொழிலைச் செய்து பணம் சம்பாதிப்போம்'' எனவே சுகுமாரன் ''அது எப்படி? கப்பலில் எந்த சாமானும் இல்லையே. நாம் தானே இருக்கிறோம். எதை விற்றுப் பணம் அடைவது?'' என்று கேட்டான்.

அப்போது சுருளிநாதன் ''அது

பற்றித்தான் யோசிக்கிறேன். நீங்களெல்லாம் உதவி செய்தால் சமாளிக்கலாம். அதுகூட ஏதாவது ஒரு தீவை அடையுமுன்பே ஏராளமான பணத்தை அடையலாம்" என்றான்.

சுகுமாரனும் "இந்த நடுக்கடலில் நாங்கள் உதவ முடியுமா? அது எப்படி?" என்று கேட்டான். சுருளிநாதனும் "எங்களைத் தாக்கிய கப்பல் சற்று தூரத்தில் வந்து கொண்டிருக்கிறது. அது நம் கப்பலை அணுகும்போது துயரச் சின்னமாகக் கருப்புக் கொடியைக் கட்டுவோம். அப்போது நாங்கள் எல்லோரும் ஒரு அறைக்குள் இருப்போம். நீங்கள் மட்டும் வெளியே நிற்பீர்கள். அக்கப்பலில் உள்ளவர்கள் கேட்கும்படி பலத்த குரலில் அழ வேண்டும். அந்தக் குரலைக் கேட்டு வியாபாரிகள் போலுள்ள அந்தக் கொள்ளைக்காரர்களின் கப்பல் நம் கப்பலின் அருகே வரும். அப்போது நீங்கள் "எங்கள் கப்பலைக் கடல்க் கொள்ளைகாரர்கள் கொள்ளை அடித்துவிட்டார்கள். இக்கப்பலின் மாலுமிகளை எல்லாம் கொன்று விட்டார்கள்" என்று கூவி அழுங்கள். நீங்கள் சொல்வதை நம்பி அந்தக் கப்பலிலிருந்து ஒரு சிலர் இந்தக் கப்பலுக்கு வருவார்கள். அவர்களை நாங்கள் இருக்கும் அறைக்குள் கொண்டு வந்து



விடுங்கள். பிறகு நடக்க வேண்டியதை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்" என்றான்.

"ஆகா! நீங்கள் சொன்னபடியே செய்து விடுகிறோம்" என்றான் ஒரு சிறுவன். இன்னொருவன் "அவர்களை என்ன செய்வீர்கள்?" என்று கேட்டான். சுருளிநாதன் பற்களை 'நற' 'நற'வென்று கடித்தவாறே "அந்தப் பாவிகள் எங்கள் ஆட்களைக் கொன்றதற்காக அவர்களைக் கண்டதுண்டமாக வெட்டிக் கூட எறியலாம். ஆனால் நான் அவர்களைக் கொல்லமாட்டேன். அவர்களது கப்பலில் உள்ளவற்றை எல்லாம் நான் எடுத்துக் கொண்டு அந்தக் கப்பலை மூழ்கடித்துவிடுவேன். அவர்களை



எல்லாம் பிடித்துக் கட்டிப்போட்டு அடுத்துவரும் தீவில் அடிமைகளாக விற்று விடுவேன். இவ்வாறு அவர்களை கொல்லாமல் நாமும் ஆதாயம் அடையலாம்'' என்றான்.

அப்போது கப்பலின் பணியாள் ஒருவன் வந்து சுருளிநாதனிடம் ''கப்பல் தென்பட்டுவிட்டது'' என்றான். சுருளிநாதனும் ''சபாஷ்! நம் கப்பலை அதன்பக்கம் செலுத்து. நம் ஆட்கள் தடிகளுடனும் துடுப்புகளுடனும் மறைந்திருக்க வேண்டும். எல்லோரையும் ஒரு அறையில் பதுங்கி இருக்கச் சொல். நானும் அங்கு வந்துவிடுகிறேன்'' என்று கூறி அவனை அனுப்பினான்.

சிற்றுண்டி சாப்பிட்டு முடிந்ததும் அவன் ஆறு சிறுவர்களையும் அழைத்துக்கொண்டு அறைக்கு வெளியே வந்தான். அப்போது கப்பல் சற்று தூரத்தில் தென்பட்டது. மறு நிமிடமே சுருளிநாதனின் கப்பல் வேகமாகச் சென்று அக்கப்பலை அணுகியது. உடனே சுருளிநாதன் சொல்லி அனுப்பியபடி எல்லோரும் தடிகளையும் துடுப்புகளையும் எடுத்துக் கொண்டு ஒரு அறைக்குள் பதுங்கினார்கள். சுருளிநாதனும் அந்த அறைக்குச் சென்றுவிட்டான்.

சுகுமாரன் பாய்மரத்தின்மீது ஏறிதூரத்தில் வரும் கப்பலில் உள்ளவர்கள் கண்களில் படும்படியாக நின்றுகொண்டான். அப்போது சுருளிநாதனின் கப்பலிலிருந்து ஒரு காகம் பறந்து போய் எதிரே உள்ள கப்பலை அடைந்தது. சுகுமாரன் அதை கவனித்துவிட்டு அது வினோதனாகத்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான்.

கப்பலின் ஒரு கம்பத்தில் கருப்புக்கொடி கட்டப்பட்டது. சுகுமாரன் சுருளிநாதன் எச்சரித்தபடி அக்கப்பலுக்கு எதிர்க்கப்பலிலிருந்து வருபவர்களைக் கொண்டு சொல்லக் காத்து நின்றான். திடீரெனச் சிறுவர்கள் ''காப்பாற்றுங்கள்'' என உரக்கக்கூவவே எதிரில் இருந்த கப்பல் சுருளிநாதனின் கப்பலை அணுகியது. அக்

கப்பலின் தலைவனாகத் தென் பட்ட முரட்டு ஆசாமியுடன் இரு பது ஆட்கள் வந்தார்கள். அவர் கள் இரு கப்பல்களையும் ஒரு பலகையால் இணைத்துக் கட்டி அதன்மீது நடந்து சுருளிநாதனின் கப்பலுக்குள் வந்தார்கள்.

சுகுமாரனும் மற்ற ஐந்து சிறு வர்களும் "நாங்கள் ஐந்து பேர் கள் தாம் இந்தக் கப்பலில் இருக் கிறோம். எங்களைக் காப்பாற்றுங் கள்" என்று அவர்களிடம் உரக்கக் கூறினார்கள். அந்த முரட்டுத் தலை வன் சுகுமாரனிடம் மெல்லிய குரலில் "எங்கே அந்தத் திருட் டுப் பயல்கள்?" என்று கேட்டான்.

சுகுமாரன் அவர்கள் மறைந் திருந்த அறையைக் காட்டி "வாருங் கள் இப்படி வந்து இந்த அறைக் குள் பாருங்கள். கொள்ளைக்காரர் கள் கொள்ளை கொண்டு போன பொருள்கள் போக மீதமுள்ளவை இந்த அறையில்தான் இருக்கின் றன. போய்ப்பாருங்கள்" என்றான்.

அத்தலைவனும் "பயப்படா தீர்கள் உங்களைக் காப்பாற்றவே வந்திருக்கிறோம்" எனக்கூறிய வாறே அந்த அறையின் வாசலுக்குப் போய் அதன் கதவைச் சட்டென மூடி வெளியே பூட்டிவிட்டான். அதன் பிறகு அவன் சாளரம் வழி யாக எட்டிப்பார்த்து "திருட்டுப் பயல்களே! என்னோடு இப்போது இருபத்தைந்து பேர்கள் இருக் கிறார்கள். இன்னமும் கப்பலில் நிறையப்பேர்கள் இருக்கிறார்கள். நீங்கள் எவ்வளவு கப்பல்களைக் கொள்ளை அடித்தீர்கள்! எவ்வளவு அப்பாவிகளை சித்திரவதை செய் தீர்கள்" இப்போது அவற்றுக்கு பதிலுக்கு பதில் அனுபவிக்கப் போகிறீர்கள். உங்களில் யாரா வது தப்ப முயன்றால் அணு அணு வாக அவனைச் சித்திரவதை செய்வோம். உங்கள் கப்பலையே எரித்து விடுவோம். மரியாதை யாக இந்த அறையில் அடைந்து கிடங்கள் நாளைக்கு ஒரு தீவை அடைவோம். அதுவரை சாப்பாடு கிடையாது. குடிக்க நீர் மட்டும் கொடுக்கப்படும். யாராவது இந்த இடத்தைவிட்டு நகர்ந்தால் அப்



புறம் நடப்பதே வேறு'' என எச்சரித்தான்.

சுருளிநாதனும் அவனது ஆட்களும் தம் அறையைச் சுற்றிக் காவலுக்கு இருபது பேர்கள் ஆயுதங்களோடு நிற்பது கண்டு திகைத்துப் போனார்கள். அவர்களது கப்பல் மற்ற கப்பலோடு பலமான கயிறுகளோடு இணைக்கப் பட்டது.

அத்தலைவன் ''சிறுவர்களே! நீங்கள் காகத்தின் வாயிலாக எங்களுக்கு விஷயத்தைத் தெரிவித்தது மிகவும் நல்லதாகப் போயிற்று'' என்றான். சுகுமாரனோ ''அதை நாங்கள் அனுப்பவில்லை. அதுதான் எங்களுக்கு உதவிபுரிந்தது. ஒரு தேவபுருஷன்தான் காக்கை வடிவில் வந்தவர்'' என்றான்.

அதைக்கேட்ட கப்பல் தலைவன் ஆச்சரியப்பட்டான். இச் சிறுவர்களுக்கு ஒரு காகம் உதவியது என்றால் அதில் ஏதோ ஒரு இரகசியம் இருக்க வேண்டும் என நினைத்தான். அது பற்றி விவரமாக அறிய வேண்டும் என்ற ஆசை அவனுக்கு ஏற்பட்டது. அதனால் அவன் அவர்களிடம் ''தேவ புருஷனா? அவரை நான் பார்க்க வேண்டுமே. எனக்குக் காட்டுகிறீர்களா?'' என்று கேட்டான்.

சுகுமாரனோ ''அது அவ்வளவு எளிதல்ல. அவர் எந்த வடிவில் எப்போது எங்கு எப்படி வருவார் என்று சொல்லவும் முடியாது. அவர் அற்புத சக்தி வாய்ந்தவர் ஆனால் எல்லோருக்கும் தாமாக முன் வந்து உதவி புரிபவர்'' என்று கூறினான்.

அப்படியா? எங்கே அவர்?'' என அத்தலைவன் கேட்கவே சுகுமாரனும் ''அவர் எங்கிருக்கிறாரோ தெரியாது. ஆனால் விரைவில் உங்களைக் காண வருவார்'' என்றான். கப்பல்கள் நகர்ந்து செல்லலாயின.

(தொடரும்)





# தன் மானம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவு வேளையில் இப்படிச் சிரமப்படுவதைப் பார்த்தால் நீ உன் தன்மானத்தைக் காத்துக் கொள்ள முயல்வதாகத் தெரிகிறது. இப்படித் தன்மானத்தைக் காத்துக் கொள்ள முயன்ற ஒருவனின் கதையைக் கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

வீரபுரத்தை வீரசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது ஒரே மகன் தீரசேனன். வீரசேனன்

## வேதாளம் சொல்லும் கதை



தன் மகனை வித்தியாநாதர் என்பவரின் குருகுலத்திற்குக் கல்வி பயில அனுப்பினான். தீரசேனனும் தன் குரு கற்றுக் கொடுத்தவற்றை எல்லாம் மிகவும் சிரத்தையுடன் கற்று வரலானான்.

அதே குருகுலத்தில் தீரசேனனோடு மேலும் பல மாணவர்கள் கல்வி பயின்று வந்தார்கள். அவர்கள் நடுத்தர குடும்பத்தினரின் புதல்வர்கள். அதனால் அரசகுமாரனான தீரசேனன் தனக்கு அரண்மனையிலிருந்து வரும் தின்பண்டங்களையும் ஆடைகளையும் அவர்களுக்குக் கொடுக்கலானான். அவற்றை வாங்கிக் கொள்ள மாதவன் என்பவனைத் தவிர மற்றவர்களெல்லாம் ஓடோடிச் சென்று கைநீட்டுவார்கள். மாதவனோ அத்திசையில் கண்ணெடுத்துக்கூடப் பாராமலே இருந்து வந்தான்.

தீரசேனன் மாதவனை அழைத்து தின்பண்டங்களையோ துணிமணிகளையோ கொடுக்க முயன்றாலும் மாதவன் அவற்றை ஏற்கவில்லை. இப்படியாகச் சில ஆண்டுகள் கழிந்தன. ஒருநாள் வித்தியா நாதர் தீரசேனனிடம் "நீ படிக்க வேண்டியதை எல்லாம் படித்தாகிவிட்டது. எனவே நீ தலைநகருக்குச் செல்லலாம். பெரியவனாகி நாட்டை நல்லவிதமாக ஆண்டுவா" எனக்கூறி ஆசிகள் அளித்து அனுப்பினார்.

அப்போது தீரசேனன் மாதவனைக் கண்டு "நண்பா! நான் உனக்கு என் நினைவாக இந்த முத்து மாலையை கொடுக்கிறேன். ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்" என்று வேண்டினான்.

அதைக்கேட்ட மாதவன் சிரித்தவாறே "நண்பா! பரிசுகளைக் கொடுத்தால்தான் நண்பனா? நீ நம் நட்பை நினைவில் வைத்துக் கொண்டாலே போதும்" என்றான். தீரசேனனும் "சரி. நான் தலைநகர் செல்கிறேன். நீ இனி என்னிடம் எதைக் கேட்டாலும் அதைத் தருவேன். ஆனால் நீ மட்டும் சற்றும் தயங்காமல் கேட்க வேண்டும்" என்றான். பிறகு அவன் குருகுலத்தை விட்டுத் தலைநகருக்குச் சென்றான்.

இதற்கு ஓராண்டிற்குப் பின் வீரசேனன் இறக்கவே தீரசேனன் நாட்டின் மன்னனானான். மாதவனும் தன் படிப்பை முடித்துக் கொண்டு தன் ஊரை அடைந்தான். அவனுக்கு ஒரு சாதாரண வேலை தான் ஒரு ஜமீன்தாரரிடம் கிடைத்தது. அது அவனது தகுதிக்கு ஏற்ற வேலை அல்லதான். ஆயினும் குடும்பச் செலவிற்குப் போதிய ஊதியம் கிடைத்ததால் மாதவன் திருப்தி அடைந்தே இருந்தான்.

ஒருநாள் மாதவனைக் காண அவனது தந்தையின் நண்பனான சதாசிவம் என்பவன் வந்தான். அவன் மாதவனிடம் "தம்பீ! என் மகன் கேசவன் வேலை எதுவும் கிடைக்காமல் திண்டாடுகிறான். எனக்கோ வயதாகிவிட்டது. குடும்ப பாரத்தைச் சுமக்க முடியவில்லை. நீயும் இந்நாட்டு மன்னனும் ஒரே குருகுலத்தில் படித்தவர்களாயிற்றே. நீ அவரிடம் ஒருவார்த்தை சொன்னால் என் மகனுக்கு ஒரு உத்தியோகம் கிடைக்கும். ஒரு குடும்பத்திற்கு உதவிய புண்ணியம் உனக்கும் கிடைக்கும்" என்றான்.

மாதவனும் சதாசிவனின் மகனை அழைத்துக் கொண்டு தலைநகர் சென்றான். அவன் தீரசேனனைக் கண்டு விஷயத்தைத் கூறவே தீரசேனனும் அந்த இளைஞனுக்கு இராணுவத்தில் ஒரு நல்ல உத்தியோகத்தைக் கொடுத்தான். பிறகு



அவன் மாதவனின் நலன் பற்றி விசாரித்தான்.

மாதவனும் "நான் ஒரு ஜமீன்தாரரிடம் வேலை பார்த்து வருகிறேன். சம்பளம் அதிகம் இல்லைதான். ஆனால் கிடைப்பதில் திருப்தியுடன் குடும்பம் நடத்தி வருகிறேன். இதுபோதும் எனக்கு" என்றான்.

சதாசிவனின் மகனுக்கு மாதவன் மன்னனிடம் சிபாரிசு செய்ததால் நல்ல உத்தியோகம் கிடைத்தது என்ற செய்தி மாதவனின் ஊராரிடையேயும் உறவினர்களிடையேயும் பரவியது. இதனால் மாதவனின் மதிப்பு அவர்களிடையே மிகவும் உயர்ந்து போயிற்று.

ஒருநாள் மாதவனின் உறவின



ரான சோமு என்பவன் அவனிடம் வந்து "நான் ஒரு அரசாங்க அதிகாரி. சிலரிடம் பணம் பெற்றுக் கொண்டு அவர்களுக்கு சாதகமாகச் சில வேலைகளைச் செய்து தந்தேன். இதனால் நான் லஞ்சம் வாங்கியதாகக் குற்றம் சாட்டி என்னை வேலையிலிருந்து நீக்கி விட்டார்கள். உனக்குத்தான் மன்னரைத் தெரியுமே. என் விஷயமாகப் பேசி எனக்கு மீண்டும் அந்த உத்தியோகத்தை வாங்கித் தா" என்றான்.

மாதவனோ "முடியாது. நீயோ லஞ்சம் வாங்கி இருக்கிறாய். அதனால் அதற்கான தண்டனையை நீ அனுபவிக்கவே வேண்டும். நான் உனக்காகப் பரிந்து பேச மாட்டேன்" எனக்கூறி அனுப்பி விட்டான். இது தீரசேனனுக்கு தெரிய வந்தது. மாதவனின் நேர்மையை எண்ணி மகிழ்ந்தான்.

இதற்கு அடுத்து வையாபுரி என்ற வியாபாரி மாதவனைக் கண்டு "நம் நாட்டில் பருத்தி அதிகம் விளைவதில்லை. துணிகளின் விலை மிக அதிகமாகவும் உள்ளது. எனவே அயல்நாடுகளிலிருந்து நாம் பருத்தி வாங்கி இங்கு துணிகளை நெய்து விற்றால் துணி குறைந்த விலையில் யாவருக்கும் கிடைக்கும். இதற்கு அரசாங்க அனுமதி தேவை. அந்த அனுமதியை வாங்கிக் கொடுத்தால் எனக்கு கிடைக்கும் லாபத்தில் கால் பங்கு உனக்குக் கொடுக்கிறேன்" என்றான்.

மாதவனும் சற்று யோசித்து விட்டு "எனக்கு லாபத்தில் பங்கு வேண்டாம். இது மக்களுக்கு நன்மை புரியும் பணி. அதனால் மன்னனிடம் கூறி நீ பருத்தியை அயல் நாடுகளிலிருந்து வாங்க அனுமதி வாங்கிக் கொடுக்கிறேன். இதனால் துணி விலை மலியட்டும்" எனக்கூறி அவனை தீரசேனனிடம் அழைத்துச் சென்றான்.

தீரசேனனிடம் மாதவன் விஷயத்தை விளக்கவே மன்னனும் வையாபுரிக்கு பருத்தி வாங்கி வர அனுமதி அளித்தான். துணி உற்பத்தி இதனால் பெருகி அதன் விலையும் எல்லோரும் வாங்கும்

விதத்தில் குறைந்தது. வருட முடிவில் கிடைத்த லாபத்தில் கால் பங்கை வையாபுரி மாதவனுக்கு கொடுக்க முயன்றும் மாதவன் அதனை ஏற்கவில்லை. இதுவும் தீரசேனனுக்குத் தெரிந்தது.

இதன் பிறகு மாதவனிடம் பலர் வந்து தம் வேலைகளுக்காக மன்னனிடம் சிபாரிசு செய்யச் சொல்லி கேட்கத் தொடங்கினார்கள். மாதவனும் நல்ல காரியங்களாக இருந்தால் மன்னனிடம் சிபாரிசு செய்ய வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டான்.

ஜமீன்தாரர் மாதவனை அவன் வேலையில் சேர்ந்த நாளிலிருந்தே கவனித்து வரலானார். அவனுக்குத் தன்மானமும் நேர்மையும் இருப்பதைக் கண்டார். இப்படிப்பட்ட நற்குணங்கள் படைத்த இளைஞனைத் தன் மருமகனாக ஆக்கிக் கொள்ள அவர் விரும்பினார். அதனால் அவர் தன் அபிப்பிராயத்தை மாதவனிடம் கூறினார்.

மாதவனோ உடனேயே "என்னை மன்னித்து விடுங்கள். நான் உங்கள் அந்தஸ்திற்கு ஏற்றவன் அல்ல" என்றான். ஆனால் ஜமீன்தாரர் மனம் தளர்ந்து விடவில்லை. அவர் ஒருநாள் ஒரு விருந்திற்கு ஏற்பாடு செய்தார். அதில் பல பிரமுகர்கள் கலந்து கொண்டார்கள்.

அப்போது ஜமீன்தாரர் மாதவனைத் தனியாக அழைத்துப் போய் "நான் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய வரிப் பணம் பல வருடங்களாகச் சேர்ந்து மிகப் பெரிய தொகையாகி விட்டது. மன்னர் இது குறித்துக் கடுமையான நடவடிக்கை எடுக்கப் போவதாக தெரிய வந்துள்ளது. நீ மன்னரைக் கண்டு எனக்கு மேலும் கொஞ்சம் அவகாசம் கொடுக்க வேண்டும் எனக் கேள்" என்று கூறினார்.



மாதவனோ "உரிய காலத்தில் வரி செலுத்த வேண்டியது நம் கடமை. நீங்கள் உங்கள் கடமையைச் செய்யவில்லை. எனவே இது பற்றி நான் மன்னனிடம் பேச மாட்டேன்" என்று சொல்லிவிடவே ஜமீன்தாரரும் "மன்னர் முதியோ



ருக்கும் விதவைகளுக்கும் மாதா மாதம் குறிப்பிட்ட தொகையை வழங்க உத்தரவு போட்டார். ஆனால் அவர்களுக்கு இப்போது பலமாதங்களாக அந்தத் தொகை கிடைக்கவில்லையே. அரசாங்கமே அந்தத் இப்படித் தவறும் போது நான் தவறக்கூடாதா?'' என்று கேட்டார்.

அப்போது மாதவன் "அரசாங்கம் தவறு செய்கிறது எனக்கூறி நாமும் தவறு செய்வது சரியல்ல'' என்றான். அதைக்கேட்ட ஜமீன்தாரர் சிரித்தவாறே -"மாதவா! இந்த விருந்திற்கு வந்தவர்களில் ஒரு சில அரசாங்க ஒற்றர்களும் இருக்கிறார்கள். அவர்கள் நாம் பேசியதைக் கேட்டிருப்பார்கள். நீயும் நானும் பேசியது மன்னர் வரை போய்விடும். அரசாங்கத்தைக் குறை கூறியதற்காக உனக்கும் மன்னனுக்கும் உள்ள நட்பு முறிந்துவிடுமே'' என்றார்.

மாதவனோ "நீங்கள் நினைப்பது தவறு. நம் பேச்சை அவர் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டார். அரசாங்கத்தை தக்க விதத்தில் விமரிசிப்பதாகத்தான் எடுத்துக் கொள்வார். எனக்கு என் நண்பனைப் பற்றி நன்கு தெரியும்'' என்றான்.

அப்போது ஜமீன்தாரர் "நாம் ஒரு பந்தயம் போடுவோம். நீ இன்னமும் மூன்று நாட்கள் கழித்து மன்னனைப் போய்ப் பார். அப்போது அவர் உன்னை முன்போல வர வேற்றால் உங்கள் நட்பைப் பாராட்டுகிறேன். அப்படி அவர் உன்னை வரவேற்காவிட்டால் நீ தோற்றதாக ஒப்புக் கொண்டு என் மகளை நீ விவாகம் செய்து கொள்ள வேண்டும்'' என்றார். மாதவனும் அப்பந்தயத்திற்கு இணங்கி மூன்று நாட்கள் கழித்து தீரசேனனைக் காணத் தலைநகர் சென்றான்.

தீரசேனன் மாதவனைக் கண்டதுமே கடுகடுப்புடன் "மாதவா? என் ஆட்சியையே விமர்சிக்கும் அளவிற்கு நீ பெரிய மனிதனாகி விட்டாயா? உன் நிலையைப் பற்றிக் கவலைப்படாமல் இதுநாள்வரை உன்னை என் நண்பனாகக் கருதி வந்தேன். இனிமேல் அப்படி

இல்லை. என்னைக்காண இனி மேல் வராதே. இப்போதே போய் விடு'' என்று கூறி அனுப்பி விட்டான்.

மாதவன் தன் ஊருக்கு வந்து ஜமீன்தாரரிடம் நடந்ததைக் கூறித் தான் தோற்றதாக ஒப்புக் கொண்டான். ஜமீன்தாரர் அவனுக்குத் தன் மகளைக் கல்யாணம் செய்து வைத்தார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னா! மாதவன் தன் நண்பனான மன்னனிடம் முதலில் வேலை கேட்காமல் ஏன் ஜமீன்தாரரிடம் போய்ச் சேர்ந்தான்? வேலைக்குச் சிபாரிசு செய்த அவன் தன் உறவினனை லஞ்சக் குற்றச்சாட்டிலிருந்து விடுவிக்க முயலவில்லை. மாதவனின் உதவியால் அனுமதி பெற்ற வையாபுரி தன் வியாபார லாபத்தில் கால் பங்கு கொடுக்க முன்வந்ததும் அதனை அவன் ஏற்கவில்லை. இதையெல்லாம் அறிந்த தீரசேனன் ஏன் மாதவன் அரசாங்கத்தை விமர்சித்தான் எனக்கூறி நட்பை முறித்துக் கொண்டான்? இதற்கு விடை தெரிந்து நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''மாதவன் தன் மானம் கொண்டவன். அதனால் அவன் தன் நண்பனிடம் தனக்காகச் சலுகை கேட்கவில்லை. அவனது நேர்மையையும் தன்மானத்தையும் அறிந்த தீரசேனன் பலரும் மாதவனைச் சிபாரிசுக்காகத் தொந்தரவு செய்வதுகண்டே அவனை அந்த நிலையிலிருந்து விடுவிக்கவே கடுமையாக நடந்து கொண்டவன் போல நடித்தான். இதுதான் உண்மைக் காரணம்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# இரண்டு முறையா அவமானம்?

ஜமீன்தாரர் ஜகவீரப் பிரபு மகாக்கஞ்சப் பேர்வழி. கோயிலுக்குப் போய் தேங்காய் உடைப்பதையோ அர்ச்சகருக்கு தட்சணை கொடுப்பதையோ சற்றும் விரும்பாதவர். அவர் கோவிலுக்கு வந்த போதெல்லாம் அர்ச்சகர் அப்பாசாமி எதுவும் எதிர்பாராமலேயே தீபாராதனை செய்வார்.

ஒருமுறை சிவராத்திரியின் போது எல்லோருக்கும் முன் ஜகவீரப்பிரபு கோவிலுக்கு வரவே அர்ச்சகர் தீபாராதனை நடத்தித் தட்டை அவர் முன் நீட்டினார்.

ஜகவீரப்பிரபுவும் கற்பூரத்தை கைகளால் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டார். பிறகு ஒரு ஐந்து காசு நாணயத்தைத் தட்டில் போட்டார். அதைக் கண்ட அர்ச்சகர் "தாங்கள்தான் இன்று முதல் போணி. தாங்கள் ஐந்து பைசா போட்டது எனக்கு அவமானமாக இருக்கிறது. இன்னும் ஒரு ஐந்து பைசாவாது போட்டால்..." என்றார்.

அப்போது ஜகவீரப்பிரபு "ஒரு ஐந்து பைசாவே உமக்கு அவமானம் என்றால் இன்னொரு ஐந்து பைசாவைப் போட்டு இரண்டாவது தடவையாக அவமானப் படுத்த விரும்பவில்லை. உங்களுக்கு முதல்த்தடவை அவமானமும் வேண்டாம்" எனக் கூறிதாம் தட்டில் போட்ட ஐந்து பைசா நாணயத்தையும் எடுத்துக் கொண்டு போய்விட்டார். அர்ச்சகர் திகைத்து நின்றார்!



# அம்புலிமாமா அனுபந்தம்—35




நம் கடவுள்:

## மஹா காளி

படைத்தல், காத்தல், அழித்தல் என்பதற்கு முதற்காரணமாக இருக்கும் மகா சக்தியை நம் பழங்கால ரிஷி, முனிவர்கள் பல உருவங்களில் கண்டிருக்கிறார்கள். களங்கமற்ற அமைதியான முகத்தோடு நல்லதைக் காக்கும் பராசக்தி கெட்டதையும் துஷ்டத்தனத்தையும் பயங்கர உரு எடுத்து அழிக்கிறாள். உலகின் படைப்பு மட்டுமல்லாது அதில் அழித்தல் என்பதும் இந்தப் பராசக்தியின் விருப்பப்படிதான் நடந்து வருகிறது என்று நம் முன்னோர்கள் நம்பினார்கள். இந்த அழித்தல் செயலைச் செய்யும் சக்தியின் உருவமே மஹா காளி.

மஹா காளி கருநிறத்தில் புலித்தோல் அணிந்து கழுத்தில் மண்டை ஓடுமாலையுடன் நான்கு கைகளில் பயங்கர ஆயுதங்கள் கொண்டு மிக பயங்கரமாகக் காட்சி அளிக்கிறாள். ஆனால் அவளிடம் பக்தி சிரத்தையுடன் இருப்பவர்களுக்கு அந்த உருவில் உள்ள அவள் அவர்களது தாய் போல ஆதரித்து எல்லா வேண்டுதல்களையும் வெற்றிகரமாக்கித் தருகிறாள் என அவளது பக்தர்கள் நம்புகிறார்கள்.

உலகில் இன்னல்களைப் போக்க பராசக்தி அவதரித்தாள் என அவளை வழிபட விஜயதசமி நாளை நாடெங்கிலும் சிறப்பாகக் கொண்டாடி வருகிறார்கள்.




# பதிமூன்றாவது வயதில் பட்டதாரி

ஒரு இந்தியச் சிறுவன் தன் பதிமூன்றாவது வயதில் பல்கலைக்கழகப் பட்டம் பெற்று அமெரிக்காவில் அபார சாதனை புரிந்திருக்கிறான். அவன் பெயர் பால முரளிகிருஷ்ண அம்பாடி வியக்கத்தக்க முறையில் தன் திறமையைக் காட்டிய இச்சிறுவனுக்கு நியூயார்க் பல்கலைக் கழகம் இப்பட்டத்தை அளித்தது. நியூயார்க் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டு 160 ஆண்டுகள் ஆகின்றன. அதன்வரலாற்றிலேயே பட்டம் பெற்ற மிகக்குறைந்த வயதினன் பால முரளிகிருஷ்ண அம்பாடிதான்.

அம்பாடியின் தாய் தந்தை இருவருமே நம் நாட்டில் ஆசிரியர்களாக இருந்து வருகிறார்கள் அம்பாடி தன் நான்காவது வயதிலேயே 'கால்குலஸ்'ஸை நன்கு கற்று விட்டான். தம் மகனின் திறமை கண்டு தாய்தந்தையர் அவனுக்குப் பெரிதும் ஊக்கம் அளித்தார்கள். அம்பாடி தன் பதினோராவது வயதில் தன் அண்ணன் ஜெயகிருஷ்ணனுடன் சேர்ந்து 'எயிட்ஸ்' பற்றி ஒரு புத்தகம் எழுதினான். அப்போதுதான் அவன் நியூயார்க் பல்கலைக் கழகத்தில் சேர விண்ணப்பித்திருந்தான். அம்பாடிக்கு முன் மிகச் சிறிய வயதில் பல்கலைக் கழகப் பட்டம் பெற்றவன் இஸ்ரேயில் நாட்டு இளைஞன். அப்போது அவன் வயது பதினெட்டு. அம்பாடி தற்போது தன் பதினெட்டாவது வயதிற்குள் டாக்டர் பட்டம் பெற முயன்று கொண்டிருக்கிறான்.

நியூயார்க் பல்கலைக் கழகம் இச்சிறுவனுக்குப் பட்டம் அளித்ததோடு 'சில்வர் டார்சை' அளித்து கௌரவித்தது. இச்சிறுவன் மேலும் மேலும் உயர்ந்து வர நம் உளம்கனிந்த நல் வாழ்த்துக்கள்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. பூஜ்யத்தைக் கண்டுபிடித்த பழங்கால கால கணித மேதை யார்?
2. 'நீர்க் குதிரை' என்பது குதிரை அல்ல. அது என்ன?
3. டோக்கியோ நகரின் முந்தையப் பெயர் என்ன?
4. கி.பி. 312ல் ரோமானிய சக்கரவர்த்தி கான்ஸ்டன்டைன் வெளியிட்ட ஒரு நாணயம் இன்றும் புழக்கத்தில் உள்ளது. அது எது?
5. உலகின் மிகப்பெரிய நூல் நிலையம் எது?
6. ஐரோப்பாவில் பிறந்து ஆசியாவில் இறந்து ஆப்பிரிக்காவில் புதைத்து சமாதி கட்டப்பட்ட மன்னர் யார்?
7. ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் மிகப் பெரியது எது?
8. தன் தேசியக் கொடியில் தன் நாட்டு வரைபடத்தைக் கொண்டுள்ள நாடு எது?
9. எவரெஸ்ட் சிகரத்தை அடைந்த எட்மண்ட் ஹிலேரியும் டென்சிங் நார்கேயும் அங்கு நான்கு கொடிகளைப் பறக்கவிட்டார்கள். அவை யாவை?
10. ஹென்றி ஆர்சர் கண்டுபிடித்த இயந்திரத்தை தபால் தலைகள் தயாரிக்கும் அச்சு இயந்திரத்தோடு சேர்த்து உபயோகிக்கிறார்கள். அது என்ன?
11. கலிலியோ முதல் முதலாகக் கண்டுபிடித்த அறிவியல் கொள்கை எது?
12. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகப் பட்டம் பெற சார்லஸ் டார்வின் எடுத்துக்கொண்ட விஷயம் என்ன?
13. இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்த முதல் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் யார்?
14. பூமி சூரியனை ஒருமுறை சுற்றிவர எவ்வளவு காலமாகும்?
15. எவரெஸ்ட் சிகரத்தின் பெரும்பகுதி உள்ள பாறை எது?

## விடைகள்

1. ஆரியபட்ட
2. குதிரைவடி மீன்
3. ஈடோ
4. போலிபெ
5. மாஸ்கோவ் லெனின் ஸ்டேட்லைப்ரரி
6. அலெக்ஜாண்டர் சக்கரவர்த்தி.
7. ஹாம்லட்
8. சைப்ரஸ்
9. ஐ.நா, பிரிட்டன், நேபாளம், இந்தியா
10. பெர்போரேடிங் மெஷின்.
11. அசைவாடி
12. மதம்
13. ஐசன் ஹோவர் 1958
14. 335 நாட்கள் 5 மணி 48 நிமிடம் 46 நொடிகள்.
15. சுண்ணாம்புப் பாறை



## லண்டன் வனவிலங்கு அருங்காட்சியின் அறிவிப்பு

கடந்த 160 ஆண்டுகளாக இருந்து வரும் லண்டன் விலங்கு அருங்காட்சியகம் சென்ற இரண்டு ஆண்டுகளாக பொருளாதார நெருக்கடியில் உள்ளது. இதனை விலை கொடுத்து வாங்குவதானால் 40 மில்லியன் பவுன்களாகும் என அதன் நிர்வாகிகள் கருதுகிறுர்கள். ஆனுல் பிரிட்டிஷ் அரசாங்கம் அதற்கு உதவ முன்வரவில்லை. எனவே அருங்காட்சியக நிர்வாகிகள் உலகிலுள்ள உயிரின அபிமானிகளுக்கும் சிறுசேமிப்பு வைத்துள்ள சிறுவர்களுக்கும் வேண்டுகோள் விடுத்துப் பண உதவி கோரியுள்ளார்கள். அவ்வித உதவி கிடைக்காவிட்டால் அங்குள்ள பிராணிகளை வேறு இடங்களுக்கு அனுப்ப வேண்டிய நிலை உருவாகி விடும் என அவர்கள் கூறியுள்ளனர்.

# அம்புலிமாமா செய்திகள்

## இயேசுவின் மொழி

பைபிலிலுள்ள இயேசுகிருஸ்துவின் அறிவுரைகளை உலகின் எல்லா மொழிகளிலும் மொழிபெயர்த்துள்ளார்கள். இயேசு அராமிக் மொழியில் தன் கொள்கைகளைப் போதித்தார். அப்போது அந்த மொழி முற்றிலும் அழியும் நிலையில் உள்ளது. தற்போது இம்மொழியை சிரியாவின் டமாஸ்கஸ் நகரின் வடக்கேயுள்ள பகுதியில் ஒருசில ஆயிர மக்களே பேசி வருகிறுர்கள். இதற்கு எழுத்து வடிவம் இல்லை. எனவே இம்மொழியை எழுதிப்படிக்க முடிவதில்லை. சிரியாவில் ஹீப்ரு மொழியோடு அராமிக் மொழியும் தேசிய மொழியாக அறிவிக்கப் பட்டுள்ளது.




## கோல்ப் ஆட்டப் பரிசு பிராணிகளே

அண்மையில் மலேயேசியாவில் நடந்த கோல்ப் போட்டியில் வென்றவர்களுக்குப் பணமோ, பதக்கமோ பரிசாக அளிக்கப் படவில்லை. இப்போட்டியில் முதலாவதாக வந்தவருக்கு ஒரு பசுவும் இரண்டாவது மூன்றுவது இடங்களைப் பெற்றவர்களுக்கு ஆடுகளும் நான்காவது ஐந்தாவது இடங்களைப் பெற்றவர்களுக்கு முயல்களும் பரிசாக அளித்தார்கள். 'போலோ இன் ஒன்' சாதனை புரிந்தவருக்கு ஒரு குதிரையோடு நான்கு சக்கர வண்டியும் கொடுப்பதாக அறிவித்தார்கள். ஆனால் அதனை யாருமே பெறவில்லை. கோல்ப் ஆடுபவரிடையே வேளாண்மைக்கு ஊக்கம் அளிக்க இவ்வாறு பரிசுகள் அளிப்பதாக அந்நாட்டு வேளாண்மை மந்திரி அறிவித்தார்.





# மந்திரக் காது

ஜப்பான் நாட்டில் ஒரு இளைஞன் இருந்தான். அவன் ஒருநாள் கடற்கரையில் நடந்து கொண்டிருக்கையில் கடலோரம் இருந்த ஒரு குட்டை நீரில் ஒரு மீன் துள்ளிக் கொண்டிருப்பதைக் கண்டான். அது கடலிலிருந்து அக்குட்டையில் ஒதுக்கப்பட்ட மீன் என எண்ணி அவன் அதனை எடுத்துக் கடலில் போட்டான்.

அப்போது யாரோ "கொஞ்சம் நில்" என்று அவன் பின்னாலிருந்து குரல் கொடுக்கவே அவன் திரும்பிப் பார்த்தான். அப்படிச் சொன்னது ஒரு பெண் அவன் ஆச்சரியப்பட்டு அவளைத் திரும்பிப்பார்த்து நின்றான். அவளும் அவனருகே வந்தாள். அவளும் "கடல் மன்னன் என்னை அனுப்பினார். அவரது ஒரே மகளின் உயிரை சற்று முன் காப்பாற்றினாய். உன்னை எங்கள் நாட்டிற்கு அழைத்து வரும்படி அவர் என்னை அனுப்பியுள்ளார்." என்றாள்.

அவள் கூறியபடி அவள் பின்னால் அந்த இளைஞன் சென்றான். அவள் கடலில் விழுந்ததும் ஒரு மீனாகி விட்டாள். அந்த இளைஞன் அந்த மீனின் முதுகின் மீது உட்கார்ந்து கொண்டான். மீனும் நீந்திச் சென்றவாறே அவனிடம் "எம்மன்னர் உன்னிடம் ஏதாவது வரம் கேட்கும்படி கூறினால் நீ அவரிடம் உள்ள மந்திரக்காதுதான் வேண்டும் என்று கேள். அவரும் நீ அவரது மகளைக் காப்பாற்றிய தன் நன்றிக் கடனாக அதனை உனக்குக் கொடுத்து விடுவார். அதை நீ உன் காதில் வைத்துக் கொண்டால் உலகில் எந்த உயிரினம் பேசும் மொழியும் உனக்குப்புரி

—ஜப்பான் நாட்டுப் பழங்கதை—

யும்'' என்றது.

இளைஞனும் சற்று நேரத்தில் கடல் மன்னனின் நாட்டை அடைந்து அவனைக் கண்டான். அந்த மன்னனும் அவனை அன்புடன் வரவேற்று உபசரித்தான்.

ஒரு நாள் கடல் மன்னனிடம் அவன் தன் ஊருக்குப் போக விரும்புவதாகக் கூறவே கடல் மன்னனும் "நீ இங்குள்ளவற்றில் எதை வேண்டுமானாலும் கேள். நான் கொடுக்கிறேன்'' என்றான். அவனும் "உங்களிடமுள்ள மந்திரக்காதை எனக்குக் கொடுங்கள்'' என்றான்.

கடல் மன்னனும் மந்திரக்காதை அவனிடம் கொடுத்தான். இளைஞன் அதனைப் பெற்றுக் கொண்டு முன்பு அவனைச் சுமந்து சென்ற மீனின் உதவியால் மீண்டும் தன் நாட்டை அடைந்தான்.

அந்த இளைஞன் கடற்கரையில் தனியாக ஓரிடத்தில் உட்கார்ந்திருக்கையில் இரண்டு குருவிகள் 'கீச்'சென்று கத்திக் கொண்டிருப்பதை அவன் கேட்டான். அவன் உடனே தன்னிடம் உள்ள மந்திரக் காதை எடுத்துத் தன் காதில் வைத்துக் கொண்டு அவை என்ன பேசுகின்றன என்று கேட்கலானான்.

ஒரு குருவி "கொஞ்ச தூரத்தில் உள்ள ஒரு கால்வாயைக் கடக்க மக்கள் அதன் நடுவே ஒரு கல்லின் மீது காலை வைத்துக் கடக்கிறார்கள். உண்மையில் அது கல்லே அல்ல. தங்கக்கட்டி. இதை ஒருவனும் அறியவில்லை'' என்றது.

அதைக் கேட்ட இளைஞன் ஆச்



சரியப்பட்டு அந்தக் கால்வாய்க்குப் போனான். அதன் நடுவில் இருந்த கல்லை எடுத்து மேலே படர்ந்திருந்த பாசியைத் துடைத்தான். அப்போது அது தங்கமாக மின்னுவதைக் கண்டான். குருவி கூறியது உண்மையாகியது.

அவன் அந்தத் தங்கத்தோடு தன் வீட்டிற்குச் செல்லும் வழியில் இரண்டு காகங்கள் 'கா' 'கா' வென்று கத்தின. உடனே இளைஞன் அவை என்ன பேசிக் கொள்கின்றன என அறிய விரும்பி மந்திரக்காதை எடுத்துத் தன் காதில் வைத்துக் கொண்டு கேட்கலானான்.

ஒரு காகம் "இந்த மனிதர்களுக்கு எதுவுமே தெரிவதில்லை. இந்த பகுதி ஜமீன்தாரரின் மகளுக்கு என்ன வியாதி கூடத்தெரியாமல் வைத்தியர்கள் மருந்து கொடுத்து வருகிறார்கள். அவளுக்குள்ள வியாதியை எந்த மருந்தினாலும் தீர்க்க முடியாது. ஜமீன்தாரின் வீட்டுக் கொட்டகையின் கூரையை மாற்றும் போது வைக்கோலோடு சேர்த்து ஒரு நல்லபாம்பு அக்கூரைக்குள் அகப்பட்டுவிட்டது. அதையாராவது கூரையிலிருந்து வெளியே எடுத்து அதற்குப் பால் வைத்து குடிக்கச் செய்தால் அவள் குணமடைவாள்" என்றது.

மற்ற காகமோ "இது யாருக்குத் தெரியப் போகிறது?" எனவே அந்த இளைஞன் அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டான். பிறகு அவன் ஜமீன்தாரரின் வீட்டை அடைந்தான்.

இளைஞன் ஜமீன்தாரரைக் கண்டு



தான்அவரது மகளின் நோயைப் போக்குவதாகக் கூறினான்.

ஜமீன்தாரரோ "என் மகளை யார் குணப்படுத்தினாலும் எனக்கு மகிழ்ச்சியே. இதுவரை யாராலும் முடியவில்லை. நீயும் முயன்று பார்" என்றார். இளைஞன் உள்ளே போய்க் கட்டிலில் படுத்திருந்த ஜமீன்தாரரின் மகளைப் பார்த்து விட்டு ஜமீன்தாரரிடம் "உங்கள் மகளுக்கு எவ்வித நோயும் இல்லை. அவளை ஒரு பாம்பின் மனக் குமுறல்தான் இப்படி வாட்டு கிறது. அந்தப் பாம்பு உங்கள் கொட்டகைக்கூரையில் இருக் கிறது" என்றான்.

உடனே ஜமீன்தாரர் தன் வீட்டி லுள்ள கொட்டகையின் கூரையைப் பிரித்துப் போடும்படித் தன் ஆட் களிடம் கூறினார். கூரை பிரிக்கப் பட்டதும் வைக்கோலின் மத்தி யில் ஒரு நல்லபாம்பு இருப்பதைக் கண்டார்கள் அந்த இளைஞன் ஜமீன்தாரரிடம் "ஒரு கிண்ணத் தில் பால் கொண்டு வரச் சொல் லுங்கள்" என்றான்.

ஜமீன்தாரரின் கட்டளைப்படி ஒரு பணியாள் ஒரு கிண்ணத்தில் பாலைக் கொண்டு வந்தான். அந்த இளைஞன் அதனை வாங்கி அந்தப் பாம்பின் வாயின் பக்கம் வைத் தான். அந்தப் பாம்பு அந்தப் பாலைக் குடித்து விட்டு சரசரவென்று வேகமாகப் போய்விட்டது. ஜமீன் தாரரின் மகள் அங்கும் இங்கும் நடந்து உற்சாகத்துடன் விளங்கி னாள். முற்றிலும் அவள் மாறி நல்ல அழகியாகத் தென்பட்டாள்.

ஜமீன்தாரர் அடைந்த மகிழ்ச் சிக்கு அளவே இல்லை. அவர் அவ னிடம் "நீ என் மகளின் உயிர் போகாமல் காப்பாற்றினாய். அத னால் அவளையே உனக்கு மண முடித்து வைக்கிறேன். நீங்கள் சுக மாக வாழலாம்" என்றார்.

இளைஞனும் ஜமீன்தாரரின் மகளை மணந்து கொண்டு சுகமாக வாழ்ந்தான்.






# குருவின் மேன்மை

சத்தியன் என்ற கிராம வாசிதன் மகனான குணசீலனைத் தக்கதொரு குருகுலத்தில் சேர்த்து நல்லகல்வி அளிக்க விரும்பினான். அதற்காக யாருடைய குருகுலத்தில் தன்மகனைச் சேர்க்கலாம் என யோசித்தபோது பலரும் யோகானந்தர் என்பவரின் குருகுலத்தில் சேர்க்கச் சொன்னார்கள். யோகானந்தர் அவ்வள்வு பெரிய அறிஞரா என நேரில் காண சத்தியன் தன் மகன் குணசீலனை அழைத்துக் கொண்டு அவன் ஊரிலிருந்து பத்து மைல் தூர கிராமத்திலுள்ள அவரது குருகுலத்திற்குச் சென்றான்.

யோகானந்தரைப் பற்றிப் புகழ்ந்து கூறியதையும் அவருக்கு இணையாக யாருமே இல்லை என்றும் கேட்டும் அவன் திருப்தி அடையவில்லை. கண்ணால் காண்பதுவும் பொய், காதால் கேட்பதும் பொய். தீர விசாரித்து அறிவதே மெய் என்பது சத்தியனின் நினைவிற்கு வந்தது. அதனால் தான் குருகுலத்தைத் தானே கண்டு அங்குள்ள நிலையை அறிய அவன் கிளம்பி சென்றான்.

அப்போது யோகானந்தர் குளிக்க ஆற்றிற்குச் சென்றிருந்தார். சத்தியனையும் அவனது மகனையும் யோகானந்தரின் மனைவி மக்கள் வரவேற்று உபசரித்தனர். சத்தியன் அவரை உடனேயே காணவிரும்புவதாகக் கூறவே அவரை குருவின் மூத்த மகனும் அவரது ஆறுவயதுப் பேரனும் அழைத்துக் கொண்டு யோகானந்தர் குளிக்கும் இடத்திற்குச் சென்றார்கள்.

யோகானந்தரும் சத்தியனைக் கண்டதும் இன்முகத்துடன் வரவேற்றார். அப்போது சத்தியன்

—வி. லாவண்யா—



"குருசிரேஷ்டரே! முக்கியமான இரு நிறங்களில் தங்களுக்கு எது பிடிக்கும்? முதலாவதா அல்லது இரண்டாவதா?" எனக்கேட்கவே அவரும் இரண்டுமே பிடிக்கும் என்றார்.

அப்போது சத்தியன் குருவின் பேரனிடம் "நாங்கள் பேசியது புரிகிறதா?" என்று கேட்கவே அச் சிறுவனும் "ஏன் புரியாமல்? நீங் கள் கேட்டது இரவும் பகலும் பற் றியது. இரண்டில் எது பிடிக்கும் எனக்கேட்க அவர் இரண்டுமே என்று பதில் சொன்னார்" என் றாள்.

அப்போது சத்தியன் "பனி ரெண்டு நிறைந்திருக்கையில் உங் களைப் போன்ற வயோதிகர்கள் அதில் ஆறில் ஒரு பங்கில் ஏன் சிரமப்பட வேண்டும்?" என்று கேட்டான். குருவுடன் "நான் பிறந்த பிறகு, இறந்து மீண்டும் பிறந்த முப்பத்து இரண்டு சந்ததி யார் இன்னமும் உயிரோடு இருக் கும் போது எனக்கு என்ன கவலை?" என்றார்.

சத்தியன் குருவின் மகனை பார்க்கவே அவனும் "நீங்கள் என் தந்தையிடம் இந்தக் குளிர் காலத்தில் ஏன் கஷ்டப்பட வேண் டும் என்று கேட்டீர்கள். அவரும் தன் பற்கள் இன்னமும் உறுதியாக உள்ளன என்றும் தம் உடலில் சக்தி இருப்பதால் சிரமமே இல்லை என்றும் பதில் சொன்னார்" என்று விளக்கினான்.

மீண்டும் சத்தியன் குருவிடம் "ஐயா! வீட்டை மீண்டும் மீண் டும் கட்டியும் இடித்தும் வாழ்பவர் கள் எத்தனை பேர்கள் இருக்கி றார்கள்?" என்று கேட்டான். குரு வும் "அவ்வித வேலைகளைச் செய்துவிட்டு நிறுத்தியவர்கள் நான்கு பேர்கள். இப்போது அவர் களைச் சேர்ந்தவர்கள் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

இதனையும் குருவின் மகனே விளக்கினான்: "நீங்கள் கேட்ட கேள்வி உங்கள் வீட்டில் குழந்தை கள் இருக்கிறார்களா என்பது. அதற்கு என் தந்தை அளித்த பதில்

தனக்கு நான்கு புதல்வர்கள் இருக்கிறார்கள் என்றும் அவர்களுக்குப் பலகுழந்தைகள் பிறந்துள்ளார்கள் என்பதே'' என்றான்.

சத்தியன் மீண்டும் ''நீங்கள் அவ்வப்போது ஒளிமயமான பெண்ணை அழைத்து வருகிறீர்களென நான் நினைக்கிறேன். நான் சொல்வது சரிதானே?'' என்று கேட்டான்.

குருவும் ''இல்லை. ஒளிமயமான பெண்ணை அழைத்து வந்தால் அவளுக்குத் துணிமணிகள், நகைகள் என்றெல்லாம் கொடுத்து மரியாதை செய்து கொண்டிருக்க வேண்டும் அல்லவா? அதனால் ஒளிமயமான பெண்ணையே அழைத்து வராமல் என் பெண்ணையே எப்போதும் நம்பி இருக்கிறேன். அதுவே எனக்கும் போதும்'' என்றார்.

இதனையும் குருவின் மகன் பின்வருமாறு விளக்கினான்: ''நீங்கள் கேட்டது என் தந்தை கடன் வாங்குகிறாரா என்றே'' அவரும் பதிலாக ''இல்லை. நான் சுயமாகச் சம்பாதிப்பதைக் கொண்டு வாழ்ந்து திருப்தி அடைகிறேன்'' என்பதே.

சத்தியன் மேலும் குருவிடம் கேள்வி கேட்கலானான் ''கற்பக மரத்தைத் தான் அணுக வேண்டுமே யொழிய ஒரு ஈர்க்குச்சியை ஆதாரமாக் கொள்வது சரியா?''



என்று கேட்டான்.

குருவும் ''கற்பக மரம் இருப்பதால்தானே ஈர்க்குச்சியும் கிடைக்கிறது. ஈர்க்குச்சிகளை ஒன்று சேர்த்துத் துடப்பமாக ஆக்கி அதனால் சுத்தம் செய்து எதையும் லட்சுமிகரமாக்குகிறோம்'' என்றார்.

சத்தியன் குருவின் மகனைப் பார்க்கவே அவனும் ''மன்னரின் ஆதரவு இருந்தாலே கிராமம் இருக்கும். நான் கிராமத்தைப் புறக்கணித்தால் வேறு யார் அதனை முன்னேற்றுவார்? கிராமவாசிகள் எல்லோரும் படித்தால் ஒற்றுமையுடன் வாழ்வார்கள். அப்போது கிராமம் முன்னேற்றம் அடையும். கிராமவாசிகள் அரசாங்கத்தில் பதவிகளையும் பெறமுடியும். இதனால்

நாடு செழிப்புற்று உயர்ந்து விளங்கும். இதுவே என் தந்தை கூறிய தன் பொருளாகும்'' என்று விளக்கம் தந்தான்.

இவர்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போது குருவின் மூன்று வயதான பேத்தி ஓடி வந்தாள். அவள் வந்ததும் தன் தாத்தாவிடம் பல கேள்விகளை மூச்சு விடாமல் கேட்டுக் கொண்டே இருந்தாள்.

அந்தப் பெண்ணைப் பார்த்து மகிழ்ந்து போன சத்தியன் ''நான் ஒரு சின்ன கேள்வி கேட்கிறேன் பதில் சொல்கிறாயா?'' என்று கேட்டான். அவளும் ''கேளுங்கள்'' எனவே ''மௌனமாக இருக்க வேண்டும் என்றால் முதலில் என்ன செய்ய வேண்டும்?'' என்ற கேள்வியை அவன் கேட்டான்.

அச்சிறுமியும் ''ஒரேடியாகக் கூச்சலும் கூப்பாடும் முதலில் போட வேண்டும்'' என கூறிவிட்டு ஓடினாள். அதைக் கேட்ட எல்லோரும் சிரித்தார்கள்.

சத்தியன் மலைத்துப் போனான். யோகானந்தரும் அவரது குடும்பத்தினரும் எவ்வளவு சிறந்த அறிவாளிகள் என்பது அவனுக்குப் புரிந்தது. தன் மகன் கல்வி பயில யோகானந்தரின் குருகுலமே ஏற்றது என்பதை அவன் உணர்ந்தான்.

அவன் கொண்டிருந்த ஐயம் விலகியது. அவனே நேரில் குருவும் அவன் மகனும் பேரன் பேத்திகளும் எவ்வளவு கூறிய அறிவு படைத்தவர்கள் என்பதை கண்டான். அதனால் அவன் மனம் முழுத்திருப்தியை அடைந்தது. தன் மகன் கல்வி பயில அதுவே ஏற்ற குருகுலம் என்று அவன் அப்போதே தீர்மனித்துவிட்டான்.

அவன் தன் மகன் குணசீலனை அந்த குருகுலத்தில் சேர்த்துவிட்டு மகிழ்ச்சியுடன் தன் ஊருக்குத் திரும்பிச் சென்றான்.






பிரகஸ்தன் அனுமாரிடம் இராவணன் கேட்கச் சொன்ன கேள்விகளை ஏல்லாம் கேட்டான். அனுமாரும் அக்கேள்விகளுக்குப் பதில் சொல்லலானார்:

''என் பெயர் அனுமான். நான் வானர மன்னன் சுக்கிரீவனின் தூதன். நான் இங்கு வந்தது சீதா தேவியைத் தேடித்தான். சீதை இராமரின் மனைவி. நீ அவ்ரைக் கவர்ந்து வந்து அசோகவனத்தில் சிறை வைத்திருக்கிறாய். நான் உன்னைக் காண விரும்பி அசோக வனத்தில் மரம் செடிகளை ஒடித்துப் போட்டேன். என்னைக் கொல்லப் பல ராட்சஸர்கள் முயன்றார்கள். என்னைக் காத்துக்கொள்ள நான் அவர்களை எல்லாம் கொன்றேன். என்னை எந்த அஸ்திரத்திலும் கட்ட முடியாதபடி பிரம்மதேவனிடமிருந்து வரம் பெற்றிருக்கிறேன். என்மீது பிரம்மாஸ்திரம் எய்யப்பட்டதும் அதற்கு மரியாதை காட்டும் பொருட்டே அதற்குக் கட்டுப்பட்டு உன்னைக் காண வந்தேன்.

உனக்கு வாலியைத்தான் நன்கு தெரியுமே. அவன் உன்னைப் பத்துத் தலைப்பூச்சி என்று கூறித் தன் மகன் அங்கதனின் தொட்டிலில் பொம்மை போலக் கட்டியவனாயிற்றே. அவனை இராமர் ஒரே அம்பை எய்து கொன்று சுக்கிரீவனைக் கிஷ்கிந்தாயின் மன்னனாக்கியதன் பேரில் சுக்கிரீவன் நான்கு திசைகளிலும் சீதா



தாக இராமர் வானரர்களின் முன்னால் சபதம் செய்தார். சீதா தேவியை நீ சிறைப்படுத்தி வைத்த தன் வாயிலாக நீ மரணத்தை அழைத்துக் கொண்டிருக்கிறாய்.

என்னைப் பார். நான் மனிதனும் அல்ல இராட்சஸனும் அல்ல. எனவே நடுநிலை தவறாமல் எதையும் சிந்தித்து முடிவு எடுக்க முடியும். நீ சீதாதேவியை விடு தலை செய்து இராமரிடம் ஒப் படைத்து நீ செய்த குற்றத்தை மன் னிக்கும்படி அவரிடம் வேண்டிக் கொள். அப்படி நீ செய்யத் தவறி னால் நீ இராமர் கையால் சாகத் தான் வேண்டி வரும்''

அனுமார் சற்றும் பயப்படாமல் இவ்வாறு கூறியதைக் கேட்டதும் இராவணன் கடும் கோபம் கொண் டான். அவன் உடனே ''இந்தக் குரங்கைக் கொல்லுங்கள்'' என்று உரத்த குரலில் கட்டளையிட்டான்.

அப்போது அறிஞனான விபீஷ ணன் இராவணனிடம் ''இராவ ணேஸ்வரா! இந்த அனுமாரைக் கொல்வது ராஜதர்மப்படி சரி யல்ல. இவனோ சுக்கிரீவ மன்ன னின் தூதனாக வந்திருக்கிறான். தூதனாக வந்தவனைக் கொல் லக் கூடாது. ஆனால் வேறுவகை யில் தண்டிக்கலாம் என ராஜதர் மம் கூறுவதால் அப்படிச் செய். அவனது அங்கங்களில் ஏதாவது ஒன்றைத் துண்டிக்கலாம். சவுக்

தேவியைத் தேடத் தன் ஆட்களை அனுப்பினான். அவ்வாறு அனுப் பப்பட்டவர்களில் நானும் ஒருவன் அவர் சார்பில் சொல்ல வேண் டியதை உன் நன்மைக்காக நான் சொல்கிறேன். கவனமாகக் கேள்.

தர்மசாஸ்திரங்களைக் கற்ற நீ பிறரது மனைவியைக் கவர்ந்து வருவதைத் தவறு என்று நினைத் துப் பார்க்கவில்லையா? இராமர் மிகுந்த பராக்கிரமசாலி. அவரது கோபத்திற்கு ஆளான எவனும் மூன்று லோகங்களில் எங்கிருந் தாலும் தப்ப முடியாது. இதனை மன்னர் சுக்கிரீவன் உனக்குத் தெரிவிக்கச் சொன்னார். சீதா தேவியைக் கவர்ந்து சென்ற வனைத் தாமே கொல்லப் போவ

கடி கொடுக்கலாம். சூடு போட லாம். தலையை மொட்டை அடிக் கலாம். இவற்றில் ஒன்றைச் செய். மேலும் நீ உன் கோபத்தை இவன் மீது காட்டக்கூடாது. இவனை அனுப்பியவர்கள் மீது காட்ட வேண்டும். ஏனெனில் அவர்கள் சொல்லச் சொன்னதைத்தான் இவன் சொல்லி இருக்கிறான். இவனை அனுப்பினால் அவர்கள் உன்மீது படை எடுத்து வருவார் கள். அவர்களை நீ போரில் அப் போது வென்று உன் பலத்தைக் காட்டலாம்'' என்றான்.

இராவணனும் சற்று யோசித்து ''சரி. நீ சொல்கிறபடியே செய்கி றேன். குரங்குகளுக்குத் தன்வாலின் மீது மிகவும் பிரியம். அதனால் இதன் வாலில் நெருப்பை மூட்டி அதைப் பொசுக்கிவிடும்படி இந்த அனுமானுக்கு தண்டனை விதிக்கி றேன். அந்தக் குறைப்பட்ட வாலுடன் இவனை மக்கள் வேடிக்கை பார்க்க இலங்காபுரியின் வீதிகளில் இழுத் துச் செல்லட்டும்'' என்றான்.

இராட்சஸர்கள் கந்தல் துணி களைக் கொண்டுவந்து அனுமாரின் வாலின் நுனிப்பகுதியில் சுற்றி அதில் எண்ணெய் விட்டார்கள். பிறகு அதற்கு நெருப்பு மூட்டினார் கள். அனுமார் கோபம் கொண்டு தன் வாலின் நெருப்பால் அவர் களைத் தாக்கி கொன்றார்.

அனுமாரின் வால் எரிவதை வேடிக்கை பார்க்க சிறுவர்களும் பெண்களும் கிழவர்களும் கூடி விட்டனர். ராட்சஸ வீரர்கள் ஓடி வந்து அனுமாரைப் பிடித்துக் கட்டு





வீடுகளுக்கும் தீ வைத்துக் கொண்டிருக்கிறார். நகரமே எரிந்து கொண்டிருக்கிறது'' என்றாள்.

ஆம். அனுமார் தம்மைக் கட்டுகளிலிருந்து விடுவித்துக் கொண்டு வீட்டுக்கு வீடு தாவி ஒவ்வொரு வீட்டிற்கும் நெருப்பு வைத்துக் கொண்டிருந்தார். அவருக்கு உதவ அக்கினி தேவனும் வாயுதேவனும் வந்தனர். அக்கினி தேவன் நெருப்பின் எரிச்சலைத் தீவிரப் படுத்தினான். வாயுதேவன் அதை விரைவில் பரவச் செய்தான்.

பிரகஸ்தன், மகாபார்சுவன், சுதன், வச்சிரதம்ஷ்ட்ரன், சாரணன், இந்திரஜித், ஜம்புமாலி, சுமாலி முதலியவர்களுடைய மாளிகைகள் எரிந்து சாம்பலாயின. அனுமார் விபீஷணனின் மாளிகையை மட்டும் எரிக்காமல் விட்டு விட்டு மற்ற எல்லா மாளிகைகளுக்கும் தீ வைத்து எரித்தார். மாளிகைகள் எரிந்ததோடு அவற்றில் வெகு காலமாகச் சேர்த்து வைக்கப் பட்டிருந்த விலையுயர்ந்த பொருள்களும் எரிந்து சாம்பலாயின.

மாளிகைகளில் இருந்த தங்க வெள்ளி நகைகளும் பாத்திரங்களும் உருகிப் போயின. மெல்லிய அழகான பட்டாடைகள் கருகிச் சாம்பலாகின. கட்டடங்கள் அனலால் வெடித்துத் தகர்ந்து விழுந்தன. மாளிகைகளுள் இருந்த பல ராட்சஸர்கள் எரிந்து இறந்து

கள் போட்டு இழுத்து சென்றார்கள். அவர்கள் அனுமாரை இலங்காபுரியின் வீதிகளில் கொண்டு செல்ல அவரோ தம் வாலை வீதியின் இருபுறங்களிலும் ஆட்டி அங்கிருந்த வீடுகளுக்கும் மாளிகைகளுக்கு தீ வைக்கலானார்.

சீதைக்கு அனுமாரின் வாலில் தீ மூட்டப்பட்ட செய்தி கிடைத்தது. அதனால் அவள் மிகவும் வருத்தப்பட்டாள். அப்போது சரமா அவளைப் பார்த்து ''கவலைப்பட வேண்டாம். அனுமார் மிகுந்த சக்திசாலி. அவர் தன்னோடு வந்த ராட்சஸர்களை எல்லாம் அடித்துக் கொன்று விட்டுத் தம் கட்டுகளிலிருந்து விடுபட்டதோடு நகரில் வீட்டுக்கு வீடு தாவி எல்லா

போனார்கள். அழகான இலங்கா புரி பாழாகியது. எங்கும் கூக்குர லும் மரணஒலியுமே கேட்டது.

அனுமாரின் கோபம் தணிந் தது. இலங்காபுரியின் அலங்கோல நிலை கண்டு திருப்தி அடைந்தார். தாம் பல ராட்சஸர்களைக் கொன்ற தற்காகவும் இலங்காபுரியைத் தீயால் பொசுக்கிச் சாம்பலாக்கி யதற்காகவும் மகிழ்ச்சி அடைந் தாரேயொழிய சற்றும் வருத்தப்பட வில்லை. அவர் கடலுக்குப் போய்த் தன் வாலில் இருந்த நெருப்பை அணைத்தார். அவரது வாலுக்கு எவ்விதச்சேதமும் ஏற்படவில்லை!



அப்போது அவர் மனதில் தாம் செய்தது சரியல்லவோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. ஏனெனில் இலங்கை முழுவதுமே எரிந்து போனதால் சீதாதேவி இருந்த இடமும் எரிந்திருக்குமோ என்ற பயம் அவர் மனதில் குடிகொண் டது. மூளை இல்லாமல் இப்படி ஒரு செயலைச் செய்துவிட் டேனே என்று அவர் வருந்தினார். ஒருவேளை சீதாதேவி மட்டும் இறந்து போயிருந்தால் தானும் உயிரை மாய்த்துக் கொள்வது என்று அவர் தீர்மானித்துக் கொண் டார். அப்போது அவருக்கு சற்று நம்பிக்கையும் ஏற்பட்டது. நெருப் பினால் வாலுக்கே எவ்வித ஆபத் தும் இல்லாமல் செய்த அக்னி பகவான் கண்டிப்பாக சீதாதேவிக் கும் எவ்வித ஆபத்தும் நேராமல் பாதுகாத்தே இருப்பார்.

இவ்வாறு எண்ணி அவர் சிம் சுக மரத்தை நோக்கிச் சென்றார். அதன் கீழ் சீதாதேவி அமர்ந்தி ருப்பதைக் கண்டதும் அவரது மனம் மகிழ்ந்தது. அவர் சீதையை வணங்கி "தாயே! தங்களுக்கு எவ் வித ஆபத்தும் நேரவில்லையே?" என்று கேட்டார்.

சீதையும் "அனுமாரே! நீங்கள் உங்கள் சக்தி எப்படிப்பட்டது என்பதைக் காட்டிவிட்டீர்கள். உங்கள் ஒருவராலேயே இந்த ராட்சஸர்களை எல்லாம் கொன்று என்னை மீட்டுப் போக முடியும். ஆனால் என் கணவர் இங்கு வந்து இந்தக் கடையர்களைக் கொன்று



என்னை மீட்டுப் போவது தான் முறை. இதனை அவரிடம் தெரிவித்து அவருடன் நீங்களும் இங்கு விரைவில் வாருங்கள்'' என்றாள்.

அனுமாரும் "நீங்கள் கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். இராமர் கண்டிப்பாக இங்கு வந்து உங்களை மீட்பார். நான் போய் அவரிடம் உங்கள் விருப்பத்தையும் கூறி அவரோடு விரைவில் இங்கு வருகிறேன்'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்.

அவர் அரிஷ்டம் என்ற மலை மீது ஏறி தன் கால்கள் பலமாக ஊன்றி ஆகாயத்தில் எம்பினார். அப்போது அந்த மலையே அதிர்ந்து அமிழ்ந்து போயிற்று. அவர் மேகங்களிடையே ஊடுருவிச் சென்றார். சற்றுதூரத்தில் மகேந்திரமலையை கண்டதும் அவர் சிங்கம் போலக் கர்ச்சித்தார். அனுமார் எப்போது திரும்பி வருவார் என எதிர் பார்த்துக் காத்திருந்த அங்கதன் முதலான வானரர்கள் அந்தக் கர்ச்சனையைக் கேட்டதும் அவர் வெற்றியுடன் வருகிறார் என அறிந்து மகிழ்ந்தார்கள்.

அப்போது ஜாம்பவான் "அனுமான் தன் வேலையை வெற்றிகரமாகச் செய்து முடித்திருக்கிறான். அதனால்தான் இப்படி உற்சாகத்துடன் வந்து கொண்டிருக்கிறான்'' என்றான். அதைக் கேட்ட வானரர்கள் உற்சாகம் கொண்டு அனுமாரைப் பார்க்க மரங்கள் மீதும் பாறைகள் மீதும் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். அனுமாரைக் கண்டதும் அவர்கள் மரக்கிளைகளை ஆட்டித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள்.

அனுமாரும் மகேந்திர பர்வதத்தின் மீது வந்து இறங்கினார். உடனே பல வானரர்கள் ஓடிப் போய் அவரைச்சூழ்ந்து கொண்டார்கள். சிலர் அவருக்குப் பழங்களை உண்ணக் கொடுத்து உபசரித்தார்கள். அனுமார் ஜாம்பவானையும் அங்கதனையும் வணங்கி "கண்டேன் சீதையை'' என்ற

இரண்டு சொற்களை மட்டுமே கூறினார்.

அதுவே அவர்களுக்குப் புத்துயிர் அளித்தது போலாயிற்று. அந்த நற்செய்தியைக் கேட்டு ஆடினார்கள். பாடினார்கள். ஆனந்தக் கூத்து ஆடினார்கள். சில வானரர்கள் தம் வால்களை ஆட்டிக்கொண்டு குட்டிக்கரணம் போட்டனர்.

அனுமார் அந்த இரு சொற்களைக் கூறியதோடு பேசாமல் இருந்தார். மேற்கொண்டு விவரம் எதுவும் கூறவில்லை. அப்போது அங்கதன் "அனுமாரே! நூறு யோசனை தூரமுள்ள கடலைக் கடந்து போய்த்திரும்பி வந்து நீங்கள் ஒரு அற்புதச் சாதனை புரிந்திருக்கிறீர்கள். இப்படி வேறு எவராலும் செய்யவே முடியாது. உங்களுடைய ராஜவிசுவாசத்தை என்னென்று கூறுவது? நீங்கள் இராமபிரானின் மனைவி சீதாதேவியாரைக் கண்டுவந்தது எங்கள் அதிர்ஷ்டமே. இனி அவர்களது பிரிவு என்பது இராது. விரைவிலேயே அவர்கள் சந்திப்பார்கள் என எதிர்பார்க்கலாம்" என்றான்.

அனுமாரும் அங்கதனும் ஜாம்பவானும் ஒரு உயர்ந்த பாறை மீது அமர்ந்தனர். மற்ற வானரர்களும் அப்பாறையைச்சுற்றி உட்கார்ந்து கொண்டார்கள். எல்லோரும் அனுமாரின் அனுபவங்களை அவரே சொல்லக் கேட்க ஆவலாக இருந்தார்கள்.

ஜாம்பவானும் அனுமாரிடம் "அனுமானே! நீ சீதாதேவியை எங்கு பார்த்தாய்? எந்நிலையில் பார்த்தாய்? அவர் எப்படி இருக்கிறார்? இராவணன் அவருக்கு எவ்விதக் கெடுதலும் செய்யவில்லையே? உன்னிடமிருந்து விவரமாக எல்லாவற்றையும் கேட்ட பிறகே இச்செய்தியை எப்படி நாம் இராமருக்கும் சுக்கீரிவனுக்கும் தெரிவிக்க வேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும்" என்றான்.





# மன்னிப்பது எதற்கு?

பனையூர் என்ற கிராமத்தில் தருமன் என்பவன் தன் மனைவி பொன்னாயியுடன் வாழ்ந்து வந்தான். அவனுக்கென்று சொந்தமாக வீடோ வயலோ எதுவும் கிடையாது. ஒருவருடைய நாலு ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து விவசாயம் செய்து நாட்களைக் கழித்து வந்தான். ஆனால் விவசாயத்தில் போதிய பணம் கிடைக்காததால் கடன் வாங்கிக் காலம் தள்ளலானான். அதனால் அவன் அவ்வூரில் அநேகமாக எல்லோரிடமும் கடன் வாங்கி விட்டான். அவனுக்கு மேலும் கடன் கொடுப்பார் யாரும் இல்லை.

ஒரு நாள் பொன்னாயி தன் கணவனிடம் ''இந்த ஊர் தரித்திரம் பிடித்த ஊர். நமக்குச் சரிப்பட்டு வரவில்லை. நாம் பட்டணத்திற்குப் போவோம். அங்கே என் அண்ணன் இருக்கிறான். அவன் எப்படியாவது உங்களுக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுப்பான். அதற்காக முதலில் கொஞ்சம் செலவு செய்ய வேண்டிவரும். அதற்காக நீ போய் யாரிடமாவது கடன் கேட்டுப் பணம் வாங்கி வா'' என்றாள்.

தருமனும் ஊரெங்கும் கடன் வாங்கி இருந்தாலும் யாரோ ஒருவரிடம் தன் வாய்ச் சவடாலால் எப்படியோ நூறு வராகன்கள் கடன் வாங்கி வந்துவிட்டான் தான் முதலில் பட்டணத்திற்குப் போவதாயும். பிறகு பொன்னாயியை அழைத்துக் கொள்வதாயும் கூறி அவன் பணத்தோடு கிளம்பினான். ஆனால் நடுவழியில் ஒரு காட்டில் திருடர்கள் அவனைத் தாக்கி அவனிடமிருந்த நூறு வராகன்களைப் பறித்துக் கொண்டு அவனையும்

–சிவனார் செல்வன்–



அடிமையாகப் பிடித்துச் சென்றார்கள். திருடர் தலைவனுக்கு தினமும் உடலைப் பிடித்து எண்ணெய் தடவி "மாலிஷ்" செய்வது தான் அவன் வேலை.

இப்படியாக தருமன் எப்போதும் திருடர் தலைவனோடு இருந்து நான்கு மாதங்களைக் கழித்தான். ஒருநாள் ஒரு பணக்காரன் விலையுயர்ந்த ஆடைகளை அணிந்து குதிரை மீது அமர்ந்து காட்டு வழியே சென்று கொண்டிருந்தான். திருடர்கள் அவனை வழி மடக்கவே அவன் தன் வாளால் அவர்களைத் தாக்கினான். ஆனால் ஒரு மனிதன் பத்துப்பேர்களுடன் எவ்வளவு நேரம்தான் சண்டை போட முடியும்? திருடர்கள் அவனைப் பிடித்துக் கொண்டு போய் தம் தலைவனின் முன் நிறுத்தினார்கள்.

திருடர் தலைவன் அந்தப் பணக்காரரைப் பார்த்ததும் தன் ஆட்களைக் கோபித்துக் கொண்டு "இவரை ஏன் பிடித்துத் துன்புறுத்தினீர்கள்?" எனக் கூறி அவரது கால்களில் விழுந்து வணங்கி அவரது காயங்களுக்கு மருந்து போட்டு அவரை இளைப்பாறச் செய்தான்.

அந்தப் பணக்காரரர் தம் இரக்க இயல்பிற்காகப் பெயர் பெற்றவர். ஒருமுறை அரசாங்க வீரர்கள் திருடர் தலைவனைப் பிடிக்க அவனைத் துரத்தி வரவே அவன் அப்பணக்காரரர் வீட்டில் புகுந்து அவரிடம் தன்னைக் காப்பாற்றும்படி வேண்டினான். அவரும் அரசாங்க வீரர்கள் வந்ததும் "திருடனையா தேடுகிறீர்கள்? அவன் அவ்வழியே ஓடுவதை நான் பார்த்தேன். அவ்வழியே போய்த் தேடிப் பாருங்கள்" என்று வேறொரு திசையைக் காட்டவே வீரர்களும் அத்திசையில் சென்றார்கள்.

திருடர் தலைவன் அப்பணக்காரருக்கு நன்றி கூறி இனி ஒருபோதும் திருடுவது இல்லை என்று அந்தப் பணக்காரருக்கு வாக்களித்து விட்டு விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

அவன் அப்பணக்காரரிடம் "இப்போது என் ஆட்கள் தங்க

ளைத் துன்புறுத்தியதற்காக நான் மன்னிப்பு கோருகிறேன். இப்படி கேட்கக் கூட எனக்குச் சற்றும் அருகதை இல்லைதான். நான் இனி இத்தொழிலைச் செய்யாததோடு இனிமேல் இவ்வழியே செல்லும் பயணிகளை இக்காட்டிலுள்ள மற்ற திருடர்களிடமிருந்து பாதுகாப்பேன் என்றும் வாக்களிக்கிறேன். இனிமேல் நான் இங்கேயே விவசாயம் செய்து வாழ்வேன்'' என்றான்.

பணக்காரன் திருடர் தலைவன் கூறியதைக் கேட்டு மகிழ்ந்து போனார். அப்போது திருடர் தலைவன் பக்கத்தில் இருந்த தருமனுக்குத் தன் நிலை என்ன என்பது தெரியவில்லை. ஒருவேளை திருடர் தலைவனிடமே என்றென்றும் வேலை செய்து கொண்டே இருக்க வேண்டிவருமோ என்று பயப்படலானான். எனவே அவன் பணக்காரரிடம் தன்னைப் பற்றிக் கூறித் தனக்கு ஒரு வழிகாட்டு மாறு வேண்டினான்.

அப்போது பணக்காரர் திருடர் தலைவனிடம் ''இவன் உனக்கு நான்கு மாதகாலம் பணிபுரிந்திருக்கிறான் அதனால் இவனுக்கு நாலாயிரம் வராகன்கள் கொடுத்து அனுப்பிவிடு'' என்றார். திருடர் தலைவனும் அப்படியே செய்வதாகக் கூறினான்.

அப்போது அப்பணக்காரர்



தருமனிடம் ''நானும் இப்போது பனையூருக்குத்தான் போய்க் கொண்டிருந்தேன். என் உடல் நலனுக்காக நான் அந்த கிராமத்தில் போய் இருப்பது நல்லது என்று வைத்தியர்கள் கூறினார்கள். பனையூரில் பசுபதி என்பவன் தன் வீட்டையும் வயலையும் விற்பதாக அறிந்து அவற்றை வாங்கவே பதினையாயிரம் வராகன்களை எடுத்துக் கொண்டு கிளம்பி வந்தேன். நடுவழியில் இப்படி நடந்து விட்டது. இப்போதே பசுபதியின் வீட்டையும் வயலையும் நான் வாங்காவிட்டால் அவன் அவற்றை வேறு யாருக்காவது விற்றுவிடுவான். இப்போதுள்ள நிலையில் நான் பனையூருக்குப் போக முடி



யாது. நான் பட்டணத்திற்குத் திரும்பிப் போய் என் உடல் காயங்கள் ஆறியதும் அங்கு வருகிறேன். நீ உடனேயே பனையூருக்குப் போய் பசுபதியைக் கண்டு அவன் வீட்டையும் வயலையும் என் பெயரில் வாங்கிவிடு. என் பெயர் பூபதி'' என்று கூறி தருமனிடம் பதினையாயிரம் வராகன்களைக் கொடுத்தார்.

அப்போது திருடர் தலைவன் பூபதியிடம் ''ஐயா! முன்பின் தெரியாத இவனிடம் பெருந் தொகையைக் கொடுத்து உங்கள் பெயரில் வீட்டையும் வயலையும் வாங்கச் சொல்கிறீர்களே. இவன் உங்களை ஏமாற்ற மாட்டான் என்பது என்ன நிச்சயம்?'' என்று கேட்டான்.

பூபதியும் சிரித்தவாறே ''நான் எப்போதும் மனிதன் நற்குணம் கொண்டவன் என்றே நம்புகிறவன். ஒருவேளை இந்த தருமன் என்னை ஏமாற்றிவிட்டால் அதனால் எனக்கு நஷ்டம் பதினையாயிரம் வராகன்கள். இது என் ஏராளமான சொத்தில் தூசிக்குச் சமம். இந்த நஷ்டத்தைத் தாங்க முடியும். என்றாலும் கூட இவனை நம்புகிறேன். இதுதான் என் இயல்பு'' என்றார்.

இதற்குப் பின் பூபதி பட்டணத்திற்குச் சென்றார். தருமன் பனையூருக்கு வந்தான். தன் மனைவியிடம் அவன் காட்டில் நடந்ததை எல்லாம் கூறவே பொன்னாயியும் ''அந்த பூபதி சுத்தப் பைத்தியக்காரன் போலிருக்கிறது. பேசாமல் பசுபதியின் வீட்டை நாமே வாங்கிவிடலாம். பணம் என் அண்ணன் கொடுத்தான் என்று எல்லோரிடமும் சொல்லிவிடலாம்'' என்றாள். தருமனும் தன் கடன்களை எல்லாம் அடைத்து விட்டு பசுபதியின் வீட்டையும் வயலையும் மிகுந்த பணத்தில் தன் பெயரில் வாங்கி விட்டான். அவ்வளவு பணம் ஏது என எல்லோரும் கேட்ட போது தன் மைத்துனன் கொடுத்தது என்று கூறி விட்டான்.

ஒரு மாதத்திற்குப் பின் பூபதி தன் பணியாளைப் பனையூருக்கு அனுப்பினார். தருமனுக்கு அவர்

எழுதி அவன் வாயிலாக அனுப்பிய கடிதத்தில் "நான் பனையூர் வர இன்னும் இரண்டு மாதங்கள் பிடிக்கும் நீ வீட்டையும் வயலையும் எனக்காக வாங்கிய விவரம் தெரிவிக்கவும்" என எழுதி இருந்தார்.

அதற்கு பதில் அனுப்பும் வகையில் தருமன் "ஐயா! இதற்கு முன்னர் தாங்கள் ஒருவனை அனுப்பினீர்கள் அவன் வந்து தாங்கள் இந்த ஊரில் வீடும் வயலும் வாங்க விரும்பவில்லை எனக்கூறினான். இந்த வீட்டையும் வயலையும் வாங்கப் பேசி முடித்து விட்டதால் நான் என் மைத்துனனிடம் பணம் கேட்டு அவற்றை என் பெயரில் வாங்கிக் கொண்டேன். அந்த ஆள் வந்து பணம் கேட்டதால் ஊராருக்கு என்னிடம் பணம் இருப்பது தெரிந்தது. என் கடன்காரர்கள் தம் பணத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டார்கள். உங்கள் பணம் இவ்வாறு முன்பே செலவாகி விட்டது. அதை விரைவிலேயே உங்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்" என ஒரு கடிதம் எழுதி அனுப்பினான்.

ஒருவாரம் கழித்து பூபதி மற்றொரு கடிதம் தருமனுக்கு எழுதினார். அதில் "நீ என்னை ஏமாற்றி விட்டாய். உன் மாதிரி ஏமாற்று வழிகள் உள்ள ஊரில் நான் வந்து இருக்க விரும்பவில்லை. நான் வேறு



ஏதாவது ஒரு ஊருக்குப் போகிறேன்" என எழுதி இருந்தது. அதைப் படித்த தருமனின் மனம் வேதனைப்பட்டது. அவன் மனைவியோ அது பற்றிக் கவலைப்பட வேண்டாம் எனக் கூறினாள். இப்படியாக இரண்டு வருடங்கள் கழிந்தன. இதற்குள் மழை இல்லாமல் போகவே சரியான விளைச்சல் காணாமல் தருமன் அவதிப்பட்டு மறுபடியும் பலரிடம் கடன் வாங்கினான்.

அப்போது அருகேயுள்ள ஒரு காட்டில் ஒரு யோகி நூறு வராகன்கள் வாங்கிக் கொண்டு நன்மை புரிவதாக தருமன் கேள்விப்பட்டான். எனவே நூறு வராகன்களை எடுத்துக் கொண்டு அந்த



யோகியைக் காணத் தருமன் காட்டிற்குச் சென்றான். வழியில் ஒரு திருடன் அவனை நடுவழியில் மடக்கி அவனிடம் உள்ள பணத்தைக் கொடுக்கும்படி மிரட்டினான். தருமன் திகைத்துப் போனான். அப்போது வேறு சிலர் வந்து அத்திருடனைத் தாக்கிப் பிடித்து "உனக்கு எவ்வளவு தடவை இந்தத் திருட்டுத் தொழிலை விட்டு விடும்படிச் சொல்லி மன்னிப்பது? இந்தத்தடவை எம் தலைவர் உன்னை மன்னிக்க மாட்டார்" எனக்கூறி அத்திருடனையும் தருமனையும் அழைத்துப் போய்த் தம் தலைவன் முன் நிறுத்தினார்கள்.

அத்தலைவன் பூபதிக்கு வாக்குக் கொடுத்தவன். அதன்படி அக் காட்டுவழியே செல்லும் பயணிகளுக்குப் பாதுகாப்பு அளித்து வந்தான். அதைக் கண்ட தருமன் மிகவும் மகிழ்ந்து போனான். அதன்பிறகு அவன் யோகியைக் கண்டான்.

யோகி அவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு "நீ உனக்கு உதவிய ஒருவனையே மோசம் செய்து விட்டாய். நீ அவரிடம் போய் உன் செய்கைக்காக வருந்துவதாகக் கூறி அவரிடம் மன்னிப்புக் கேள். அப்போதுதான் நீ சுகப்படுவாய்" என்றார். தருமனும் உடனே பட்டணத்திற்குப் போய் பூபதியைக் கண்டுதான் அவரை ஏமாற்றியதைக் கூறித் தன்னை மன்னிக்குமாறு வேண்டினான். பூபதியும் "சரி போனது போகட்டும். உன்னை நான் எப்போதோ மன்னித்து விட்டேன்" என்றார். தருமனும் அவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டுத் தன் ஊருக்குத் திரும்பலானான். அவன் யோகியைக் கண்டு "பூபதி என்னை முன்பே மன்னித்தும் ஏன் சுகப்படவில்லை?" என்று கேட்டான்.

யோகியும் "ஒருவனது மன்னிப்பால் மற்றவன் செய்த பாவங்கள் போய்விடும் என நினைப்பது தவறு. நல்லவர்கள் கெட்டவர்களின் பாவங்களை மன்னித்தா

லும் கடவுள் அப்பாவச்செயல்களுக்கு தண்டனை அளிக்கத்தான் செய்வார். நீ பூபதியின் பணத்தை மோசம் செய்து அபகரித்தாய். பூபதி என்னவோ உன்னை முன்பே மன்னித்துவிட்டதாகக் கூறிய போதிலும். நீ செய்த பாவச்செயலுக்கு கடவுள் தண்டனை கொடுத்தார். நீ முழுவதும் மனம்மாறி, அவரது பணத்தால் வாங்கிய வீட்டையும் வயலையும் அவரிடம் ஒப்படைத்து மன்னிப்புப் பெற்றாலே நீ சுகப்படுவாய். திருடர் தலைவனைப் பார். அவன் எப்படி மனம் மாறினான்! அவனையும் தான் பூபதி மன்னித்தார். ஆனால் அவன் உன்னைப்போல இராமல் மனம் மாறி இங்கு வரும் பயணிகளுக்கு உதவிப் பாதுகாப்பும் அளிக்கிறான்'' என்றார்.

தருமனுக்கு அப்போது தன் தவறு என்ன என்று புரிந்தது. அவன் மனம் திருந்தி மீண்டும் போய் பூபதியைக் கண்டான்.

பூபதியோ ''பைத்தியக்காரா! நீ என்னை ஏமாற்றி அடைந்த பணம் என் சொத்தில் லட்சத்தில் ஒரு பங்கு கூட இல்லை. இது எனக்கு நஷ்டமானாலும் கவலை இல்லை என்று அன்றே கூறி உனக்கு எழுதிய கடிதத்தில் உன் போன்றவர்கள் இருக்கும் ஊரில் நான் இருக்க மாட்டேன் என்றும் எழுதினேன். அதனால் நான் நீ தற்போது அனுபவிக்கும் வீடு வயல் ஆகியவற்றைத் திரும்ப பெற்று விட்டேன். ஆனால் நீ சுகமாக வாழ வேண்டும். என்பதற்காக உனக்கு உதவ அவற்றை தானமாக உனக்குக் கொடுக்கிறேன். இனிமேலாவது நீ சுயநலம் கருதாமல் நல்லவனாக வாழ்ந்து வா'' எனக்கூறி அனுப்பினார்.

தருமன் ஊர் திரும்பி அக்கறையுடன் விவசாயம் செய்யலானான். அனாவசியச் செலவுகளைக் குறைத்துப் பிறக்கும் உதவி நல்லவன் என்ற பெயரையும் பெற்றான்.





# ஏன் கூறினார்?

மங்களபுரியை மகேந்திரவர்மன் ஆண்டு வந்தான். அவன் சொல்வார் பேச்சைக் கேட்பவன். தர்மம் தானம் என்றெல்லாம் தாராளமாக் கொடுக்கும் நற்குணங்கள் படைத்திருந்த போதிலும் பிறர் பேச்சைக் கேட்பது என்ற கெட்ட குணம் மட்டும் அவனை விட்டு அகலாது இருந்தது.

மன்னனது இந்தப் பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு பலர் தமக்கு வேண்டியவற்றை மன்னனிடம் சொல்லிப் பெற்றுக் கொண்டார்கள். இதனால் பல சிக்கல்கள் ஏற்பட்டன. சொல்வார் பேச்சைக் கேட்டு மன்னன் நிரபராதிகளை தண்டித்தான். குற்றவாளிகளை தண்டிக்காமல் விட்டான். இதனால் மகேந்திரன் ஆட்சி பற்றி மக்கள் அதிருப்தி அடையலானார்கள்.

ஒருநாள் ஆஸ்தான சோதிடர் ஆத்மராமர் அரண்மனைப் பக்கமாக வந்து கொண்டிருந்தார். அப்போது ஒரு கிராமவாசி ஒரு பலாப்பழத்தைத் தூக்கிக் கொண்டு போவதைப் கண்டார். அவர் அவனை நிறுத்தி "ஓ! பலாப் பழமா? மிக நன்றாக இருக்கும் போலிருக்கிறதே! யாருக்காக இதை எடுத்துப் போகிறாய்?" என்று கேட்டார்.

அந்த கிராமவாசியும் "ஐயா! என் தோட்டத்தில் முளைத்துப் பழுத்த முதல் பழம். இதனை மன்னருக்கு என் காணிக்கையாகச் சமர்ப்பிக்கப் போகிறேன்" என்றான். ஆத்மராமர் ஆஸ்தான சோதிடர் என்பது அவனுக்குத் தெரியாது.

அவர் அவனிடம் சற்று உரக்க "உன்னை நிறுத்தி ஏன் பேசிக் கொண்டிருக்கிறேன் தெரியுமா? உன் முகத்தைக் கூர்ந்து கவனித்தேன். இந்நாட்டிற்கு மன்னனாகப் போகும் லட்சணங்கள் உன்னிடம் உள்ளன. என்றாவது நீ இந்நாட்டின் மன்னனாகி விடுவாய். இதைச் சொல்லத்தான் உன்னை நிறுத்திப் பேசினேன்" என்றார்.

—காரை குருமூர்த்தி—

அவர்கள் இருவரும் பேசியதை மன்னன் சற்று தூரத்தில் நின்று கேட்டுக் கொண்டிருந்தான். தன் ஆஸ்தான சோதிடர் கிராமவாசியிடம் ஏன் அப்படி கூறினார் என்று மன்னன் ஆச்சரியப்பட்டான். வேறு ஒருவன் விரைவில் மன்னனாகப் போகிறான் என்ற விஷயத்தை ஏன் அவர் தன்னிடம் அதுவரை கூறவில்லை என்று யோசிக்கலானான்.

ஆத்மராமர் கூறியதைக் கேட்டதும் கிராமவாசி மிகவும் மகிழ்ச்சி அடைந்தான். அவன் அவரிடம் "ஐயா! எனக்கு அப்படி ஒரு அதிர்ஷ்டம் இருக்கிறதா? கொஞ்சம் விவரமாகச் சொல்கிறீர்களா?" என்று கேட்டான்.

அவரும் "ஆகா. சொல்லலாம். ஆனால் எனக்கு எவ்விதப் பயனும் இல்லாதபோது நான் ஏன் விவரமாகக் கூறவேண்டும்?" என்று கேட்டார். கிராமவாசியும் "நீங்கள் சொல்வது சரிதான் யார்தான் காசில்லாமல் ஆரூடம் சொல்வார்கள்? நானோ ஏழை. இப்போது என்னிடம் உள்ள விலையுயர்ந்த பொருள் இந்தப் பலாப்பழம்தான். இதைத் தங்களுக்குக் கொடுக்கிறேன். இதனை ஏற்றுக் கொண்டு நான் மன்னனாகப் போவது பற்றி மேலும் விவரங்களைக் கூறுமாறு வேண்டிக் கொள்கிறேன்" என்றான்.

அப்போது ஆத்மராமர் "சரி, நான் யாரென்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார் கிராமவாசியும் "தெரியாதே. இதற்குமுன் நான் தங்களைப் பார்த்தது கூட இல்லையே" என்றான்.



அப்போது ஆத்மராமர் "அதுதான் விஷயம். இதுவரை நான் யாரென்பதை நீ அறிந்திருக்கவில்லை. ஆனாலும் வழியில் வந்த நான் உன்னைப் புகழ ஏதோ நான்கு வார்த்தைகள் சொன்னதும் நீ அவற்றை நம்பி விட்டாய். ஒரு ஏழை கிராமவாசி. திடீரென எப்படி மன்னனாக முடியும் என்று சற்றும் யோசிக்காமல் மன்னனுக்குக் காணிக்கையாக நீ செலுத்த விரும்பிய இப்பலாப்பழத்தை எனக்குக் கொடுத்து விட்டாய். இதைக் கொண்டு நீ எவ்வளவு பெரிய முட்டாள் என்றும் அப்பாவி என்றும் தெரிந்துவிட்டது. யார் எதைச் சொன்னாலும் அதை உடனே நம்பி விடும் உன் போன்ற அப்பாவி இந்நாட்டில் வேறு யாரும் இருக்க முடியாது. இந்நாட்டு மன்னனாவதற்கு முட்டாள்தனமும் அப்பாவித் தன்மையும் தான் தகுதி என்றால் நீயும் கூட மன்னனாகி விடலாம். அதற்காக முயன்று பார். ஒருவேளை நீ மன்னனாக ஆனாலும் ஆகிவிடலாம்'' என்றான்.

அதைக்கேட்ட கிராமவாசி "ஐயா! நீங்கள் சொல்வது சரிதான். நான் சற்றும் யோசிக்கவில்லைதான். நீங்கள் யார் என்பதைக் கூட அறிந்து கொள்ள முயலாமல் நீங்கள் கூறியதை அப்படியே நம்பியதோடு என்னிடம் இருந்த ஒரே விலையுயர்ந்த பொருளான இந்தப் பலாப்பழத்தையும் தங்களுக்குக் கொடுக்கவும் தயாராகி விட்டேன். இப்படிப்பட்ட முட்டாளான நான் எப்படி மன்னனாக முடியும்? எனவே நான் நீங்கள் சொன்னதற்காக ஆசைப்படாமல் என் முந்தைய முடிவுப்படியே மன்னனுக்கு இதைக் கொடுக்கிறேன்'' என்றான்.

இதையெல்லாம் மன்னன் மகேந்திரனும் கேட்டுக் கொண்டிருந்தான். தனக்கு ஒரு நல்ல பாடம் கற்பிக்கவே ஆத்மராமர் அவ்வாறு அக்கிராம வாசியுடன் உரத்த குரலில் பேசினார் என்பதை அவன் புரிந்து கொண்டான். அன்று முதல் அவன் சொல்வார் பேச்சைக் கேட்டு அதன்படி நடக்காமல் தீர யோசித்து எதையும் முடிவு செய்யலானான்.






## நத்தை முட்டைகளின் பிடிப்பு

கிரீடம் போலுள்ள கூடுகளைக் கொண்ட லிம்பெக்ஸ் எனப்படும் ஒருவகை நத்தை முட்டைகள் பல்லிகளில் கால்கள் போலக் கொண்டு பாறைகளில் இறுகி ஒட்டிக்கொள்கின்றன. அவற்றை எடுக்க அவற்றின் உடல் நிறையைப் போல 2500 மடங்கு கனத்தை உபயோகித்தே எடுக்க வேண்டும்.



நியூஜிலாந்தில் ஒருவகை செடி அடர்ந்த ஆட்டு ரோமங்களைக் கொண்டது போலப் படர்ந்து வளர்கிறது. இவற்றைத் தொலைவில் இருந்து பார்த்தால் பல ஆடுகள் ஒரு மைதானத்தில் புல் மேய்வது போலத் தெரியும். இச்செடிகளை 'வெஜிடபிள் ஷீப்' எனக் கூறுகிறார்கள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



S. B. Takalkar



Manjula

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ அக்டோபர் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

## ஆகஸ்டு மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **தனித்து உண்பதில் இல்லை இன்பம்**

இரண்டாவது போட்டோ : பகுத்து உண்பதில் கொள்ளை இன்பம்

பரிசு பெற்றவர் : **எம். மதிஒளி**, பாண்டிச்சேரி-3

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.


அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# Cuddles always say "I love you."

Show your little ones how much you love them! And is there a better way of doing that than giving them a huggable, cuddlable playmate?

Cuddles. From the people who have given children the delightful entertainer of a magazine, Chandamama. Cuddles. A whole new range of stuffed toys. And, your old favourites. And, cute surprises being introduced regularly. Each one a sweet, adorable companion to your child. Absolutely safe. Designed to withstand childhandling.

Well, the fun and excitement of the festive season is just round the corner. Make it memorable for your child with a special gesture. With a Cuddle.

- CUDDLES — Stuffed toys from Chandamama.
- SAMMO — Mechanical and electronic toys from Chandamama

**CUDDLES**

*Manufactured in technical collaboration with Sammo Corporation, South Korea*

**CHANDAMAMA TOYTRONIX**

Chandamama Toytronix Private Limited, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026

*from*

**THE HOUSE OF**

**CHANDAMAMA**

I♥U

Mudra M CTPL 4274

**CUDDLES AND SAMMO TOYS WILL BE AVAILABLE AT ALL LEADING TOY OUTLETS EXCEPT IN THE STATES OF ASSAM, HIMACHAL PRADESH, MADHYA PRADESH AND NORTH EASTERN STATES**




EAT MANGO JUICE!








NUTRINE AAM-RAS HAS
REAL REAL REAL
MANGO JUICE IN THE CENTRE. GO ON
EAT • EAT • EAT • EAT • EAT
IT ALL UP!

Mudra:BLR:NC:341:91